"நான் ஒரு குடும்பப்பெண்
எனவே நான் உடுத்தும் உடைகள் குடும்பப் பாங்காக இருக்க வேண்டும்."

உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி

மஃபத்லால்
ஃபேப்ரிக்ஸ்

MF-18 TAM

மஃபத்லால் இண்டஸ்ட்ரீஸ் மஃபத்லால் ஃபைன்





# விண்வெளி அரங்கு

"பொன் அகப்பட்டாலும் புதன் அகப் படாது" என்கிற பழமொழிக்கு உண்மை யான பொருள் தெரிய வேண்டுமா?

சென்னையில் நடைபெறுகிற அகில இந் திய சுற்றுலாப் பொருட் காட்சிக்குச் செல் கிறோம். கல்வித் துறை ஏற்பாடு செய்துள்ள காட்சி அரங்கின் ஒரு பகுதி கல்லூரிக் கல்வித் துறையைச் சேர்ந்தது. இவர்கள் அமைத்துத் தந்திருக்கும் 'விண் வெளி' அரங்கில் இந்தக் கேள்விக்கு விடை கிடைக்கிறது.

'புதன் கிரகம் சூரியனுக்கு வெகு அருகில் இருப்பதால் அதை இலேசில் பார்த்துவிட முடியாது. முழு சூரிய கிரணம் போன்ற அரிதான நேரங்களிலேயே புதன் கிரகம் நம்முடைய பார்வையில் படும். இதன் அருமை கருதி எழுந்ததுதான் இந்தப் பழ மொழி.'

இந்த அரங்கில் இருபத்தைந்து பேர்வரை நின்றுகொண்டே செயற்கை வானத்தை யும் நட்சத்திரங்களையும், கிரகங்களையும் அதன் இயக்கங்களையும் பார்க்க முடியும். விவேகானந்தா கல்லூரி மாணவர்கள் நடத்து கிற இந்த விண்வெளிக் காட்சிகளில் முழு சூரிய கிரகணம் ஏற்படுவது, கரோனு என் கிற ஒளி வட்டம், சூரியப் பிழம்புச் சித றல்கள், நட்சத்திரக் கூட்ட அமைப்புக்கள் போன்றவை விளக்கப்படுகின்றன. இந் தக் காட்சி அமைப்புக்கு உதவுபவர்கள் விவேகானந்தா கல்லூரிக் கணிதப் பேரா சிரியர் திரு இராம கார்த்திகேயனும், ஸ்டெல்லா மேரீஸ் கல்லூரி கணிதத் துறை யைச் சேர்ந்த ஸிஸ்டர் லியோனியும்தான்.

தொடர்ந்து மற்ற கல்லூரிகளின் மாண வர்களும் இடம் பெறவிருக்கும் இந்த விண் வெளிக் காட்சியரங்கம், வெறும் தொடக் கம்தான். பெருவாரியான மக்களின் கவ னத்தைக் கவருகின்ற இந்த அமைப்பு, கல்கத்தாவின் பிரபலமான பிர்லா பிளான டேரியம் போன்ற ஒன்று சென்னையிலும் உரு வாக வேண்டும் என்கிற வேட்கையைத் தீவிர மாக்குகிறது.

விண்வெளிக் காட்சி அரங்கின் காட்சி அமைப்புக்களில் ஈடுபடுத்தப்பட்டுள்ள விவே கானந்தா கல்லூரி மாணவர்கள் ச. கோபால கிருஷ்ணன், கே. வெங்கடராமன், செல்வ ராஜ், சந்திரன், ஸ்ரீகாந்தன், அகமத் கபீர். இவர்கள் விவேகானந்தா கல்லூரியின் "அஸ் ட்ரானமி கிளப்"பின் உறுப்பினர்கள்.

கல்வித் துறை அரங்கின் அருகே, ஒரு டெலஸ்கோப்பை வைத்து, நிலவின் மேடு பள் ளங்கள், நட்சத்திரங்கள் வியாழன், வெள்ளி, சனிபோன்ற கிரகங்கள்இவற்றையும் பார்வை யாளர்களுக்குக் காட்ட இந்த மாணவர்கள் ஏற்பாடு செய்து வருகிறார்கள்.

- யெஸ்பால்

புகைப்படம்: வாசன் ஸ்டுடியோ

✂ 'சூரியப் புள்ளிகளைத் தேடலாமா? ✂ பொருட்காட்சியில் விண்வெளி அரங்கு



✕ பாரதப் பிரதமருக்கு மகாராஜனை முதல்வர் அறிமுகப்படுத்துகிறார்

விழா என்பதை மறந்து விட்டுத் தங்களுக்குள்ள மாச்சரியங்களைத் தீர்த்துக் கொள்வதற்கு வழி வாய்க்கால் தோண்டுகிறவர்கள். இவர்களைப் பற்றியும் கவலைப்பட அவசியமில்லை. ஏனென்றால் இவர்களுக்கே இவர்கள் சொல்லுகிற குற்றச்சாட்டுக்கள் அபாண்டம் என்பது தெரியும்.

மூன்றுவதுவகை ஒன்று உண்டு. அது நம்மை நாமே அலசிப் பார்த்துக் குற்றங்களைக் காணுகிற முறையாகும். நிலைக்கண்ணுடிக்கு முன்னால் நின்று நம்மை நாமே சரி செய்து கொள்வது போன்றது இது. வருங்காலத்தில் இதே குறைகள் மீண்டும் நிகழாமல் பார்த்துக் கொள்ள இத்தகைய

# தே மதுரத் தமிழும் மாமதுரை மாநாடும்

(சென்ற இதழ் தொடர்ச்சி)

மீ.ப.சோமு

இரண்டு பகுதிகளாக மதுரை நகரத்துக்குள்ளும் பல்கலைக் கழக விளாகத்திலுமாக உலகத் தமிழ் மாநாட்டு நிகழ்ச்சிகள் நடந்தன அல்லவா? இந்த இரண்டு ஏற்பாடுகள் பற்றியுமே சில ஆவலாதிகள் எழுந்துள்ளன. இந்தப் புகார்கள் இரண்டு சாரார்களிடமிருந்து பெரும்பாலும் வந்துள்ளன.

தமிழகத்தில் துரதிருஷ்ட வசமாகத் தமிழுக்குத் தங்கள் இதயத்தில் இடம் தராத தமிழர்களும் இருக்கிறார்கள். பிற மொழி மோகத்திலேயே ஊறி வளர்ந்து விட்டதால் தாய்மொழிப் பாசம் என்பதையே அறியாத மக்கள் இவர்கள்! தமிழுக்கு வருகிற பெருமைகளிலே மகிழக் கொடுத்து வைக்காத பிறவிகள் இவர்கள்! ''சுதேசத் துரோகிகள்'' என்று பாரதியார் இவர்களை அழைக்கிறார். இந்தத் தமிழ்த் துரைமார்களின் புகார்களைப் பற்றி இங்கே நாம் கவலைப்பட வேண்டியதில்லை.

இரண்டாவது சாரார் ஏதோ புறக் காரணங்களால் தமிழ் அன்னையின் திரு

ஆய்வு பயன்படும் என்பதால் இவ்வகையான குறைபாடுகள் என்ன என்பதைக் கவனிப்போம்.

இந்த நாளில் எந்த விழாவாகட்டும், அதில் கவியரங்கமும், பட்டி மண்டபமும் வழக்காடு மன்றமும் இல்லாமல் அமைவதில்லை! தமிழ் மக்களுக்கு இந்த நிகழ்ச்சிகளில் எப்படியோ ஒரு மோகம் ஏற்பட்டுப் போயிற்று! முக்கியமாகப் பட்டிமண்டபமும் வழக்காடு மண்டபமும்தான் தாலியும் சரடும் போல!

சில சமயம் வழக்குகளில் சூடு ஏறி அந்தச் சூடு தனி மனிதர்களின் மீதும் உஷ்ணமாகத் தாக்குவதுண்டு. ஜனவரி ஏழாந் தேதி நடைபெற்ற பட்டி மண்டபத்தில் கி. வா. ஜ. தமது தலைமையுரையின் தொடக்கத்தில் இதைப் பக்குவமாகக் குறிப்பிட்டு, அரங்கின் பேச்சாளர்கள் தரம் குறையாமல் விவாதிக்க வேண்டும் என்று ஆரம்பத்தி

✕ அங்கயற்கண்ணி தோரணவாயில் திறப்பு விழாவில் வாரியார், ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம் ஆகியோர்.

✕ மதுரை சர்வ கலாசாலையில் நடைபெற்ற விழாவில் கருத்தரங்கு மலரை வாரகத்துறை மந்திரி திரு கே. ஏ. கிருஷ்ணசாமி முன்னாள் நீதிபதி திரு மகாராஜனிடம் தருகிறார்.





லேயே கருதி சேர்த்துக் கொண்டார்! இப்படி ஒரு முன்னுரைக்கு என்ன அவசியம் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

பட்டி மண்டப நிகழ்ச்சியை ஒரு நவீன லாவணியாக்கி, எரிந்த கட்சி, எரியாத கட்சி என்ற அளவுக்குக் கொண்டு போய்விடுகிறார்கள் சிலர்! கற்றவர்கள் தங்கள் மனச் சான்றுக்கு ஒத்த இலக்கியக் கொள்கைகளை மேடையிலே எடுத்து வாதிடுவதற்குப் பதிலாக, அன்றைய நிகழ்ச்சியில் தாங்கள் எந்தக் கட்சிக்கு வக்காலத்து வாங்கியிருக்கிறோம் என்ற நினைவிலேயே பேசத் தொடங்குகிறார்கள். இன்றைக்கு மண்டோதரி சீதையை விடச் சிறந்தவள் என்று வாதிடுகிறவர், நாளைக்கு வேறொரு ஊரில் சீதை மண்டோதரியை விட உயர்ந்தவள் என்று அதே நாவினால் வாதிப்பாரானால், இது வாதத் திறமையை வளர்க்கிற மாணவர் உலகத்துப் பயிற்சியாகப் போகுமே ஒழிய, இலக்கிய அறிஞர்களின் திறனாய்வுக்குரிய சீலத்தை இழந்துவிடும் அல்லவா! கற்றுணர்ந்த அறிஞர்கள் இத்தகைய இலக்கிய நாடகங்களை எந்த அளவுக்கு இனி ஆட வேண்டும் என்பதை வரையறைசெய்ய வேண்டிய தருணம் இப்போது வந்துவிட்டது என்று கருதுகிறேன்.

மக்களுக்கு எது நல்லது என்பதை விட, மக்களுக்கு எது கிளுகிளுப்பைத் தருகிறது என்பதையே வழங்க முனைகிற இன்றைய இலக்கிய தருமப்படி மதுரையிலும் இந்த வகையான நிகழ்ச்சிகள் சக்கைப் போடு போட்டன! இவற்றின் இலக்கியத் தரம் ஒருபுறமிருக்க, இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் குறித்த நேரத்தில் குறித்த முறையில் நடத்தாமல் தாமதித்தும் நீட்டிக் கொண்டும் போனதால் பலருக்குப்பல அசௌகரியங்கள் ஏற்பட்டன.

நிகழ்ச்சிகளின் அமைப்பிலும் ஒரு சிக்கல் இருந்தது. ஒரே நேரத்தில் பல இடங்களில் பல்வேறு நிகழ்ச்சிகள் நடந்ததால், எங்கு செல்வது என்பதில் பலர் குழம்பினார்கள். எடின்பரோ நகரத்தில் அகில உலக நாடக இசை விழா நடப்பதைப் பார்த்திருக்கிறேன். ஒரே சமயத்தில் பல்வேறு நிகழ்ச்சிகளை நடத்துகிறார்கள். ஆனால் ஒரே நாடகத்தை அல்லது இசை நிகழ்ச்சியைப் பல நாட்கள் திரும்பத் திரும்ப நடத்துகிறார்கள். ஒரு நாள் ஒரு நிகழ்ச்சிக்குப் போயிருந்தவர் இன்னொரு நாள் விடுபட்ட நிகழ்ச்சியைவிடாமல் பார்ப்பதற்கு வசதியாக இருக்கிறது இந்த ஏற்பாடு! மதுரை நகரத்துக்குள்ளும் பல்கலை விளாகத்திலும் நிகழ்ச்சிகளைத் திட்டமிட்டவர்கள் தங்களுக்குள் கலந்து பேசி ஓர் இணைப்புடன் இவற்றை அமைத்திருந்தால் ஓர் அளவுக்கு இந்தச் சிக்கல்கள் தவிர்க்கப்பட்டிருக்கலாம். யார் யாரை எங்கெங்கே அழைத்துச் செல்வது போன்ற ஏற்பாடுகளில் இந்த இரு பகுதியினருக்குள்ளும் ஒரு கூட்டுறவும் இயைபும் இருந்திருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும்.

பல்கலைக் கழகத்தில் அமைக்கப்பட்ட தொல்காப்பியர் அரங்கு என்ற மேடையிலும் பல்கலைக் கழக அறைகளிலும் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் படித்தார்கள். தொல்காப்பியர் அரங்கிலே கட்டுரைகளின் ''கன''த்தைத் தாங்க முடியாமல் நெளிகிற மக்களும் கூடியிருந்த காரணத்தால், சில சந்தர்ப்பங்களில் ஆங்கிலக் கட்டுரைகளை அறிஞர் பெருமக்கள் படித்து வந்தபோது கைதட்டி அவர்களை அவமதிக்கவும் செய்தார்கள்! இத்தகைய நிகழ்ச்சிகள் அகில உலக அரங்கில் நடைபெற்றால் தமிழ்ப் பண்பாடு பற்றி நாம் நீட்டி முழக்குவதிலே என்ன பொருள்? குறிப்பிட்ட கட்டுரையின் மீது ஆர்வமும் அக்கறையும், அதற்கு வேண்டிய மனப் பின்னணியும் உடையவர்கள் மட்டுமே அங்கே வந்து கூடியிருந்தால் இத்தகைய தவறுகள் நேர்ந்திருக்க இடமில்லை. இதையேதான் மிக அருமையாகத் தமிழக முதல்வர் ஜனவரி ஒன்பதாந் தேதி தமது தொல்காப்பிய அரங்குப் பேச்சில் தெளிவோடு குறிப்பிட்டார். அவர் சொன்னார்:

''ஆய்வு அரங்கு என்பது மருத்துவ மனைகளிலே உள்ள அறுவை சிகிச்சைக் கூடம் போன்றது. இங்கே மருத்துவம் தெரிந்த வல்லுநர்களே நுழைய முடியும். மற்றவர்களுக்கு அனுமதி கொடுத்தால் சிகிச்சை கெட்டுவிடும்!'' என்று மிக அழகாகச் சொன்னார் மாண்புமிகு எம். ஜி. ஆர். அவர்கள்!

⌘ ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டின் நிறைவு விழாவன்று (10-1-81) மாண்புமிகு தமிழக முதல்வர் திரு எம். ஜி. ராமச்சந்திரன் அவர்கள் தமிழன்னையின் உருவச்சிலையைத் திறந்து வைத்தார்கள்.



இந்தக் கருத்தரங்கு ஆய்வுகளிலே இன்னொரு பெரிய ஆவலாதி! கட்டுரைகளையெல்லாம் முன்னதாகவே அச்சடிக்கப் போகிறோம், அச்சடித்தே விடுவோம், அதனால் விரைவாக அனுப்பிவிடுங்கள் என்றெல்லாம் பயமுறுத்தியிருந்தார்கள். அந்தப் பயத்தில் ஆறு மாதத்துக்கு முன்பே அனுப்பிவிட்ட சில கட்டுரைகளும் கூட அச்சாகவில்லை என்று ஒருசில துரைமார்கள் மன வேதனையோடு முறையிட்டார்கள். அதுமட்டுமில்லை. வந்து சேர்ந்த கட்டுரைகளில் ஏற்றுக்கொள்ளப்பட்டவை உண்டு; நிராகரிக்கப்பட்ட கட்டுரைகளும் உண்டு. இந்தத்தகவல் சில கட்டுரையாளருக்கு அனுப்பப்படவில்லை - என்றார்கள். இரண்டொரு அறிஞர்களுக்கு அவர்களுடைய கட்டுரைகள் ஏற்கப்பட்டதாகக் கடிதம் வந்திருந்தும் நிகழ்ச்சி நிரலில் இவர்களுடைய பெயர்கள் இடம் பெறவில்லை. இப்படி ஒரு குழறுபடி!

இந்தக் கருத்தரங்குகளை வெளிநாட்டு அறிஞர்களோடு தொடர்பு கொண்டு ஏற்பாடு செய்கிற பொறுப்பை ஏற்றுக் கொண்டவர்களுக்கு ''நடத்துனர் குழு'' என்று பெயர். இந்தக் குழுவின் முக்கியமான இணைப்பாளர் ஏ. சுப்பையா அவர்கள். உலகின் பல நாட்டு அறிஞர்களோடும் நீடித்த தொடர்பு உடையவர். ஆனால் அவருடைய வலது கையாக விளங்கிய தனிநாயக அடிகளின் மறைவானது பலஏற்பாடுகளுக்குக் குந்தகம் விளைத்து விட்டது. எண்பத்தைந்து வயதில் சுப்பையா அவர்கள் தமது உடம்பின் ஒத்துழைப்பை எந்த அளவுக்கு எதிர்பார்க்க முடியும்? குழுவின் உறுப்பினர்கள் எல்லோரையும் கலந்து முடிவு செய்கிற ஜனநாயக முறைக்கு எவ்வளவு இடம் கொடுத்துவிட முடியும்? எத்தனையோ கட்டுரைகள் வருவதும் போவதுமாக இருப்பதைக் குழுவின் உறுப்பினர்கள் எந்த அளவுக்குத் தெரிந்து கொள்ள இயலும்? பல இடர்ப்பாடுகளுக்கு நடுவில் சுப்பையா அவர்கள் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார் என்பதற்கும், மதுரையில் ஏதோ முதலிரண்டு நாளாவது வந்து தங்கினாரே என்பதற்குமாக எல்லாரும் அவருக்கு நன்றி சொன்னார்கள்!

நடத்துனர் குழுவின் தலைவர் பொறுப்பை ஏற்றுக் கொண்டவர் முன்னாள் நீதிபதி ஜஸ்டிஸ் மகராஜன் அவர்கள். அண்மையில் எதிர்பாராத ஒரு அறுவை சிகிச்சைக்கு உள்ளாகி இரண்டு மூன்று மாதங்கள் அவர் மருத்துவ மனையிலும் தீவிர சிகிச்சையிலுமாக இருக்க நேரிட்டது! டாக்டர்களின் கட்டுப்பாட்டையும் அசட்டை செய்து உடல் நிலைக்கு மீறிய வேலைகளை அவர் மேற்கொண்டு பலவீனமாகி யிருந்தார்.



''ஏம்பா சர்வர்.... இன்னைக்கு என்ன சாம்பார்?''

''லேடீஸ் பிங்கர் சார்!''

''இருக்கிற முற்றலைப் பார்த்தால் ஜெண்டில்மேன் ஃபிங்கரோன்னு நினைக்கும்படியா இருக்கு''

- என். எஸ். வி. குருமூர்த்தி



''இந்தப் பெருந் தவறுகளுக்கெல்லாம் நானே பொறுப்பாளி. என்னை மன்னிக்க வேண்டும்!'' என்று மேடையில் அவர் கூறிய போது நம்மால் அதை ஒப்புக்கொள்ள முடியவில்லை.

தவறுகளின் பொறுப்பு யாருடையது என்ற சர்ச்சை இருக்கட்டும். ஒரு முக்கியமான நடப்பை இங்கே கூற வேண்டும். கோபதாபங்களை மேடையிலே வந்து கொட்டுவதற்காகவே கச்சை கட்டி நின்ற சிலரையும், பத்மா சுப்பிரமணியம் அவர்களைப் போல மகராஜனின் கருத்துக்களுக்கு மாறான கருத்துள்ளவர்கள் சிலரையும் மேடையிலே பேசும்படி மகராஜன் அழைத்தார். அது மட்டுமில்லை. ஒரு நாள் நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிய ஓர் அறிஞர் சில பேச்சாளர்களை அனுமதிக்க முடியாது என்று மறுத்த சமயத்திலும் கூட, இரண்டு கட்சிகளையும் கேட்கிற அந்த நெடுநாளைய நீதிபதியின் முயற்சியால் அவர்களுக்கும் வாய்ப்புக் கிடைத்தது. வந்து பேசியவர்களும் கிடைத்த வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொண்டு மிச்சம் சொச்சம் வைக்காமல் மாரி பொழிந்தார்கள்!

இத்தனை குற்றப் பத்திரிகைகளுக்கு நடுவிலும் சில அற்புதமான சொற்பொழிவுகள் அங்கே நடந்தன என்பதை அழுத்தமாகச் சொல்லியே ஆக வேண்டும்.

நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் விஞ்ஞானத்தைத் தமிழில் சொல்லிக் கொடுப்பது பற்றிப் பேசும்போது சில அரிய பெரிய கருத்துக்களை மெய்சிலிர்க்கும்படி கூறினார். பாடங்களைச் சொல்லிக் கொடுப்பதற்குத் தமிழை வைத்துக் கொண்டு, அனைத்துலகக் கலைச் சொற்களை அப்படி அப்படியே ஆங்கிலத்திலேயே பயன்படுத்துவதுதான் அறிவுடைமை என்று அவர் விளக்கினார். $H_2O$ என்பதற்கு 'அ' இரண்டு 'க' ஒன்று என்பது போலெல்லாம் தமிழாக்கத்தில் இறங்கினால் நமது சொல்லாக்கம் முடிகிறவரை விஞ்ஞானம் காத்திராது என்று நாவலர் சொன்ன போது, ரசிகமணி டி.கே.சி. பேசுகிறாரா அல்லது நாவலர்தான் பேசுகிறாரா என்று ஒரு விநாடி அசந்து போய் விட்டேன். இது போலவே ம. பொ. சி. அவர்கள் ''சமயம் வளர்த்த தமிழ்'' என்ற தலைப்பில் பேசியவர், தமிழ் மொழிக்குள்ள உருக்கத்தையும் இசைப் பண்பையும் நிலைநாட்டியவர்கள் நாயன்மார்களும் ஆழ்வார்களுமே என்று முழங்கியபோது, ராஜாஜி இந்தப் பேச்சைக் கேட்டிருந்தால் எத்தனை மகிழ்ச்சி அடைந்திருப்பார் என்று உவகையோடு கற்பனை செய்து பார்த்தேன்.

இந்த அரிய பேச்சுக்களின் வரிசையிலேயே சேர்த்து வைத்து மிகவும் மதிக்க வேண்டியவை மகராஜன் அவர்கள் கம்பனுடைய எழிலியலைப் பற்றி நிகழ்த்திய ஆங்கில உரையும், தமிழக முதல்வர் ஒன்பதாம் தேதி நிகழ்த்திய வாழ்த்துரை என்னும் அரிய கருத்துரையும்!

இந்தச் சொற்பொழிவுகள் தவிர, பாராட்டப்பட வேண்டிய ஆய்வுக் கட்டுரைகள் பலவும் உண்டு. புத்தனேரி சுப்பிர





# கிரிக்கெட் இரட்டையர்!

இங்கிலாந்திலிருந்து வந்துள்ள பெண்கள் கிரிக்கெட் கோஷ்டியில் ஜில்லும் ஜேனும் இரட்டையர். இவர்களில் யார் ஜில் யார் ஜேன் என்று தெரியாமல் எல்லோரும் அடிக்கடி திண்டாட வேண்டி இருக்கிறது. ஜில் தான் காப்டன். இங்கிலாந்து பெண்கள் கோஷ்டியுடன் சென்னையில் நமது வீராங்கனைகள் பிப்ரவரி 6, 7, 8ல் மோதுகிறார்கள்.

புகைப்படங்கள்: டில்லி ராஜு

மணியம், டாக்டர் டி. ஈ. ஞானமூர்த்தி, டாக்டர் சுந்தரம், டாக்டர் வ. சுப. மாணிக்கம், டாக்டர் இளங்கோ, சுதா, ராணி ரகுபதி, கோமளா வரதன், டாக்டர் ஐராவதம் மகாதேவன், டாக்டர் எஸ் ராமநாதன், எஸ். சீனிவாசன் — சொல்லிக் கொண்டே போகலாம்! அயல் நாட்டு அறிஞர்களிலே டாக்டர் வாஸக், டாக்டர் ஆஷர், டாக்டர் எலிக்கி ஸன்ஹுஸ், டேவிட் மக்கால் பின், பீட்டர் கார்ட்னர், ரிச்சர்ட் ப்ரஸ்கா போன்ற பலரைக் குறிப்பிட வேண்டும். மொழி, வரலாறு, கலை, அறிவியல் என்று பல துறைகளும் பற்றிப் பல்கலைக் கழகத்தின் பன்னிரண்டு அறைகளில் (சில நாட்களில் 13) ஒவ்வொரு நாளும் நான்கு அல்லது ஐந்து ஆய்வுரைகள் படிக்கப்பட்டன. ஆறு நாட்களில் ஏறத் தாழ முந்நூறு கட்டுரைகள்! இவை அனைத்தும் நூல் வடிவம் பெற்றால் எவ்வளவு பயன் படும்! ஆனால் ஒன்று! இத்தனை ஆய்வுகளுக்குள்ளும், இன்றைய இலக்கியம் பற்றிய கட்டுரைகளும், இன்றைய எழுத்தாளர்கள் பலரும் இங்கே இடம் பெறாமல் போனது. அதற்கு யார் பொறுப்பு என்றாலும், குறை குறையேதான்! குறிப்பிடும் படியான அண்மைக் காலத்து இலக்கிய மேதைகள் சிலர் சிலைகளில் இடம் பெறாது போனது போலவே, சில முக்கிய எழுத்தாளர்கள் இங்கு வராததையும் ஒரு குறையாகவே பலரும் பேசிக் கொண்டார்கள். எண்ணிக்கையில் ஓர் அளவு இருக்க வேண்டி நேர்வதால் இப்படிச் சிலரை விடும்படி ஆகிவிடுகிறது போலும்! அதோடு சொற்களின் ஆராய்ச்சியும், மொழியியல் ஆராய்ச்சியும் சேர்ந்து பிடித்துக் கொண்ட இடம் அதிகம்! அனைத்துலக ரீதியில் இலக்கிய நூல்களை ஆராய்கிற கட்டுரைகள் இன்னும் அதிகமாக இடம் பெற்றால்தான், தமிழிலுள்ள கவிச் செல்வங்களின் மதிப்பு சரியான கணிதத்துக்கு உலகத் தராசிலே ஏறும்! வள்ளுவரோடு கம்பனும் இளங்கோவும் மற்றக் காப்பியக் கவிஞர்களும், தமிழகச் சித்தர்களும், ஞானிகளும், இசைத் தமிழ்ப் புலவர்களும் உலக அரங்கிலே எப்படித் தலைநிமிர்ந்து நிற்கிறார்கள் என்பதைப் பிற நாட்டு நல்லறிஞர்கள் நன்கு காண வேண்டாமா?

அடுத்து வரும் மாநாடுகளில் இந்தக் குறையும், இது போன்ற மற்றக் குறைகளும் இல்லாமல் அமைய வேண்டும் என்பதே நம் அனைவருடைய ஆசையும் ஆகும்! நல்லெண்ணத்திலிருந்து எழுகிற இந்த ஆசை நிச்சயம் கைகூடும் என்று எதிர்பார்க்கலாம்!

எந்தக் குறை எப்படி இருந்தாலும், இத்தனைக்கும் ஈடு செய்கிற முறையில் விழாவின் நிறைவு நாளன்று எதிர்பாராத ஒரு

மகிழ்வு வெளி நாட்டுப் பிரதிநிதிகளுக்குக் காத்திருந்தது. அதுதான் பாரதப் பிரதமர் இவர்களைச் சந்திக்கப்போகிறார் என்று காதாகச் சொல்லப்பட்ட செய்தி!

ஆம்; ஜனவரி பத்தாந் தேதி மாலையில் பாண்டியன் விடுதியில் அந்தச் சந்திப்பு மிக நேர்த்தியான முறையில் நடந்தது. நமது தமிழக முதல்வர் பாரதப் பிரதமருக்கு நடத்துனர் குழுவின் தலைவர் மகராஜனை அறிமுகம் செய்கிற மலர்ச்சியான காட்சியை இக்கட்டுரையின் தொடக்கத்தில் உள்ள புகைப்படம் காட்டுகிறது. இந்தச் சந்திப்பின்போது வெளி நாட்டு அறிஞர்கள் சிலர் நிகழ்த்திய பாராட்டுரைகளும், அன்பு மொழிகளும் பிரதமர் அவர்களை மிகவும் மகிழ்வித்தன என்பது வெளிப்படையாகவே தெரிந்தது. ஏனென்றால் இந்தக் கூட்டத்தில் பிரதமர் உரை நிகழ்த்துவதாகவே திட்டம் இல்லை. இதன் பிறகு பந்தய மைதானத்தில் நடக்கவிருந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் தாம் பேசப் போவதால், இங்கே தனியாக வேறொரு பேச்சு வேண்டாம் என்று ஆரம்பத்திலே கூறிய பிரதமர், இந்த வெளி நாட்டு அறிஞர்களின் அன்பு மொழிகளிலே மனம் நெகிழ்ந்து உவகையில் பூரித்தார். தாமே முன்வந்து சுருக்கமாகவும் அழுத்தமாகவும் சில நன்மொழிகள் பேசினார்! தமது அரசின் இலட்சியமாகிய உலக சகோதரத்துவத்துக்கு இத்தகைய மாநாடுகள் எவ்வளவு துணை செய்கின்றன என்று இந்திரா காந்தி அம்மையார் அவர்கள் சுத்தமான ஆங்கிலத்திலே அன்போடு பேசியதைக் கேட்டு, அத்தனை அயல் நாட்டுப் பேராளர்களும் ஆனந்தத்தினால் கைதட்டி ஆரவாரம் செய்தார்கள். சந்திப்புக்கு ஏற்பாடு செய்த தமிழக முதல்வரைப் பாராட்டினார்கள்.

இந்தச் சந்திப்புக்குப் பிறகுதான் பந்தய மைதானத்தில் இலட்சக் கணக்கான மக்கள் கூடியிருந்த மனிதக் கடலின் நடுவே பாரதப் பிரதமர் எழுந்து நின்று, தமிழ் மொழியைப் பற்றி ஓர் அரிய ஆராய்ச்சிச் சொற்பொழிவு நிகழ்த்தினார். மாநாட்டு ஆய்வு அரங்குகளிலே ஆறு நாட்களிலும் படிக்கப்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகளின் தரத்திலே வைத்து மதிக்க வேண்டிய இன்னொரு ஆய்வுரையாகத் திகழ்ந்தது, இந்திரா காந்தியவர்களின் நயமான ஆங்கிலச் சொற்பொழிவு!

ஆவலாதிகள் இல்லாத கலியாணம் ஒரு கலியாணமா? அகில உலகக் கலியாணம் என்றால் புகார்களும் உலகளவு விரிந்தும் பரந்தும்தானே இருக்கும்? எனினும் ஒரு மாபெரும் தமிழ்த் திருமணம் மாபெரும் முறையிலே கூடல் மாநகரிலே கூடி மங்களமாக நடந்தேறியது என்று பெண் வீட்டாரைப் போலத் தமிழக அரசு மெய்யாகவே மகிழ்ச்சி அடையலாம். அந்த மகிழ்ச்சியோடு,

வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே!
என்று மனமார வாழ்த்திடலாம்!

## நொறுக்குத் தீனி!



"என் மனைவிக்கும் அம்மாவுக்கும் சண்டை வந்ததினாலே என் மனைவி குழம்பு சாதமும் எங்கம்மா மோருஞ் சாதமும் கொடுத்தனுப்பி யிருக்காங்க!"

"அதுசரி ஒத்துமையா இருந்தா எப்படி கொடுத்தனுப்பு வாங்க?"

"மோர்க் குழம்பு தயாரிச்சுடுவாங்க!"

அ. ராமதாஸ்

நாவல்கள் தங்கள் வாசகர்களை பாவம் செய்யத் தூண்டுவதில்லை; எப்படிச் செய்ய வேண்டும் என்பதைக் கற்பிக்கின்றன, அவ்வளவே! - லிம்மர்மன்

- என். ராஜகணேஷ்

'பாரத ரத்னா' விருது பெறுவதற்காக டில்லிக்குப் போயிருந்தார் மதர் தெரசா. பரிசளிப்பு விழாவில் அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த கிரிக்கெட் ஆட்டக்காரர் கவாஸ்கரிடம் அவர் கூறியது: 'இந்த விழாவிற்காக நிறைய பணம் செலவழிக்கப் படுகிறது. அந்தப் பணத்தை வைத்து நிறைய அனாதை விடுதிகள் கட்டலாமே!'

'சன்டே'

- அனிதா ராமச்சந்திரன்





### உடல் கறுப்பதேன்

வெய்யிலில் அலைந்தால்தான் உடல் நிறம் கறுக்கும் என்பதில்லை. இரவில் வெகு நேரம் சுற்றிக் கொண்டிருந்தாலும் தோலின் தன்மை மாறிக்கறுக்கும்.

தகவல்: ரமா ராம்நாத்
ஆதாரம்: சன்டே

# திரை உலகில் மிகவும் புகழ்பெற்று விளங்கும் AVM நிறுவனத்தாரால் இன்று பெருமையுடன் இசை உலகத்தையும் மகிழ்விக்க மிகச் சிறந்த AVM கேஸட்டுகள் வெளியிடப்படுகின்றன



AVM CASSETTE

## STEREOPHONIC PRE-RECORDED CASSETTES

### குறைந்த விலையில் மிகச் சிறந்த 12 கேஸட்டுகளின் முதல் வெளியீடு

| | | |
|---|---|---|
| MEI SR 1001 | விநாயகர் அகவலும் பாடல்களும் | T. L. மகாராஜன் |
| MEI SR 1002 | நாதஸ்வரம் | T. E. பழனிசாமி |
| MEI SR 1003 | கிறிஸ்துவப் பாடல்கள் (தமிழ்) | Various Artistes |
| MEI SR 1004 | வேதகோஷம் | ராதாகிருஷ்ண சாஸ்திரிகள் குழுவினர் |
| MEI SR 1005 | தேவாரம் | லால்குடி சுவாமிநாதன் குழுவினர் |
| MEI SR 1006 | திருவெம்பாவை | S. ராஜேஸ்வரி |
| MEI SR 1007 | ஐயப்பன் பாடல்கள் | ஸ்ரீ மணிகண்ட பக்த சமிதி |
| MEI SR 1008 | இஸ்லாமியப் பாடல்கள் (தமிழ்) | Various Artistes |
| MEI SR 1009 | An Affair to Remember (Instrumental) | தஞ்சப்பா & ராஜு |
| MEI SR 1010 | Mopla Songs (மலையாளம்) | Various Artistes |
| MEI SR 1011 | திவ்யப்பிரபந்தம் (தமிழ்) | மணி கிருஷ்ணசாமி |
| MEI SR 1012 | கர்நாடக இசை | M. L. வசந்தகுமாரி |




**SPECIAL ADVANTAGES OF AVM CASSETTES**

1. CASSETTES SCREWED AND NOT WELDED, HENCE EASILY SERVICEABLE.
2. CAN BE USED AGAIN FOR MORE AND MORE RECORDINGS, SEAL ON THE SIDE OF THE CASSETTE IS NOT REMOVED.
3. EXQUISITE STUDIO QUALITY, TRANSFERRED DIRECT TO MAGNETIC CASSETTE FROM MASTER MAGNETIC TAPE.
4. EXCELLENT IN QUALITY AND ECONOMICAL IN PRICE.
5. PRINTED TEXT OF SONGS WITH EVERY CASSETTE TO FACILITATE EASY FOLLOWING.
6. ALL ABOVE FEATURES ARE A SPECIALITY TO AVM PRERECORDED CASSETTES ALONE, WHICH ANY STANDARD PRERECORDED CASSETTE IS DEVOID OF.

**Available with all leading Radio & Record Dealers**

MAXIMUM RETAIL PRICE Rs. 28-80 TAXES EXTRA

MANUFACTURED & MARKETED BY
**AVM PROJECTION SERVICE**
MENA BUILDINGS
57, Dr. RADHAKRISHNAN ROAD MYLAPORE,
MADRAS-600 004 CONTACT: 82883

AVM CASSETTE


அமெரிக்கா


ப்ளீஸ்!
ப்ளீஸ்!
நான் 'ப்ளீஸ்' சொல்லிட்டேன். அவரை யார் 'ப்ளீஸ்' பண்றது?
வாஜ்பாயின் சமரச திட்டம்


மத்திய அரசும் மத்திய பிரதேச அரசியலும்!
அர்ஜீன் சிங் கோஷ்டி
சுக்லா கோஷ்டி

# எதற்குப் போராடுவது?

'தினை விதைப்போம் வினை அல்ல' என்ற தலையங்கத்தைப் படித்து விட்டு ஒரு விவசாயி வருந்தி எழுதியுள்ளார். ''போக்குவரத்துத் துறையினர், காவல் துறையினர், கல்லூரி ஆசிரியர்கள் போன்றோர் வேலை நிறுத்தம் செய்தால் உடனடியாகப் பாதிப்பு ஏற்படுகிறது; எனவே அவர்கள் கோரிக்கைகள் தாமதமின்றிக் கவனிக்கப் படுகின்றன; எங்களை யார் லட்சியம் செய்கிறார்கள்? ஆகவேதான் சாலை அடைப்பு, போக்குவரத்து மறிப்பு போன்ற போராட்டங்களில் இறங்க வேண்டியுள்ளது'' என்கிறார் அவர். எந்தத் துறையினராலும் அவர்களது நியாயமான கோரிக்கைகள் போராட்டம் தொடங்கப்படு முன்னரே கவனிக்கப் படவேண்டியதுதான். அதுதான் திறமையான அரசுக்கு அழகு.

இந்தியாவின் ஜனத்தொகையில் 80 சதவீதம் கிராமங்களில். வேலை இல்லாதோரை ஒதுக்கி ஏதேனும் ஒரு வேலையில் ஈடுபட்டிருப்போரை மட்டும் பார்த்தால் அவர்களில் 72 சதவீதம் விவசாயிகளே! விவசாயத்தில் ஈடுபட்டிருப்போரில் ஐம்பது சதவீதத்தினருக்குச் சொந்தத்தில் நிலம் இல்லை. இவர்கள் கூலி வேலை செய்பவர்களே. நாளுக்கு நாள் நிலமற்ற விவசாயிகளின் எண்ணிக்கை அதிகரிக்கிறதே யொழிய குறையவில்லை. பல்வேறு நிலச் சீர்திருத்தங்கள் இவர்களுக்கு உதவவில்லை. பசுமைப் புரட்சியினால் இவர்கள் நிலை உயரவில்லை. நிலமற்றோருக்கு நிலம் என்ற கொள்கை அமலாகியும் இவர்கள் துயர் தீரவில்லை. குறைந்தபட்ச ஊதியச் சட்டம் இயற்றியதால் இவர்கள் கஷ்டம் விடியவில்லை. கொள்முதல் விலை நிர்ணயித்து அரசாங்கமே வாங்கிய போதிலும் கட்டுப்படியாகவில்லை. காரணம் என்ன? விவசாயிகளுக்கு ஆண்டு முழுவதும் வேலை கிடைக்காததுதான். வேலை இருந்தால்தானே கூலி?

சொந்தத்தில் நிலம் வைத்திருப்பவர்களிலும் மிகப் பெரும்பாலோர் உழுக்குக்கூட மிஞ்சாத அளவில் மிகக் குறைவான விஸ்தீரணமுள்ள நிலத்துக்குச் சொந்தக்காரர்கள். எனவே இவர்கள் தங்கள் நிலத்தை உழுவதுடன் பிறர் நிலத்திலும் வேலை பார்த்துச் சம்பாதிக்க முற்படுகின்றனர். இவர்களுடைய வாழ்க்கைத் தரமும் உயரவில்லை. குடும்பத்தில் நாலு பேர் இருந்தால் ஒருவருக்கு வேலை கிடைக்கிறது; மூவருக்கு இல்லை. இவர்கள் எல்லாம் திரும்பத் திரும்பக் கடன் வாங்கி வட்டியும் அசலும் திருப்பித் தர முடியாமல் திணறுகிறார்கள்.

இதற்கெல்லாம் பரிகாரம் காண்பதுதான் காந்திய சோஷலிஸம். ஆண்டு முழுவதும் மக்களுக்கு வேலை இருக்க வேண்டும்; கூலி கிடைக்க வேண்டும். இதற்குக் கிராமங்களை யொட்டியுள்ள சிறு நகர்களைச் சுற்றிலும் ஏராளமான தொழில்கள் தொடங்கப்பட வேண்டும். இதனால் விவசாயக் கூலிகள் படிப்படியாகத் தொழில் துறை கூலிகளாக மாறுவார்கள். வேலை தேடி அவர்கள் பட்டணப் பிரவேசம் செய்வது குறையும். பெரிய நகரங்களில் நெருக்கடி மேன்மேலும் அதிகரிக்காது.

தொழில்கள் தவிர, தரிசு நிலத்தை விவசாயத்துக்குக் கொணர்தல், நீர்ப்பாசன வசதிகளை அதிகரித்தல், ஒரு போகத்தை இரு போகமாக்குதல், சாலைகள் அமைத்தல், பள்ளிகள் நிறுவுதல், கானகம் வளர்த்தல் போன்ற காரியங்களிலும் கவனம் செலுத்தி, கிராமப்புற மக்களுக்கு ஆண்டுமுழுவதும் வேலை வாய்ப்பு ஏற்படுத்தித்தர வேண்டும். ராஜாஜி வலியுறுத்தியது இதைத்தான். ஷுமோஹர் போன்ற பொருளாதார மேதைகள் இதற்குத்தான் ஆதரவு தந்து இதற்கென Inter mediate technology வளர்க்க வேண்டும் என்கின்றனர். இத்திட்டத்தின் ஒட்டுமொத்த விளைவாகத் தேசப் பொருளாதாரமே சிறக்கும்.

பெரிய நகரங்களை ஒட்டியுள்ள பிரும்மாண்டமான தொழிலகங்கள் அயல் நாட்டுப் பிரமுகர்களுக்குச் சுற்றிக்காட்ட உதவலாம்; நாட்டின் வறுமையை ஒழிக்க உதவாது. விவசாயிகள் 'கிராமப்புறப் பொருளாதாரத்தை அமலாக்குங்கள்' என்று குரல் கொடுக்க வேண்டுமேயொழிய, 'கடனைத் திருப்பித் தரமாட்டோம், மின் கட்டணம் செலுத்த மாட்டோம்' என்று அற்பக் காரணங்களுக்குப் போர்க் கொடி உயர்த்துவதால் எவ்விதப் பயனும் யாருக்கும் இல்லை.

1981 பிப்ரவரி 1

ரௌத்திரி தை 19

மலர் 39 : இதழ் : 27



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

## 5. தீப்பெட்டி, கண்ணாடி

கெட்ட காரியன் படி ஏறி மாடிக்கு வர அங்கே மாட்டிக் கொண்டுவிட்ட வஸந்த் இரண்டு சா. கூறுகளை ஆராய்ந்தான். ஒளிந்து கொள்வது அல்லது வரப்போகிறவனை லோவர் ப்ளெக்ஸஸில் குத்திவிட்டுப் படிகளில் சரிந்து ஓடியே போய்விடுவது.

கண்டா முண்டா ரூமில் ஒளிவதற்கு இடமில்லை. முஷ்டியைத் தயார் படுத்திக்கொண்டு மாடிப் படி விளிம்பில் காத்திருந்தான். வஸந்துக்கு அந்த நெருக்கடி வேளையிலும் ஒரு விஷயம் உறுத்தியது. தப்பான இடத்திற்கு வந்து விட்டோமோ என்ற சந்தேகம். பேராசிரியர் அந்த வீட்டில் கீழே டெலிபோன் இல்லை. மாடிக்கு அழைத்துச் சென்று டெலிபோன் செய்ய வைத்தார்கள் என்று சொன்னதாக ஞா. ஆனால் நான் கீழே அல்லவா டெலிபோனைப் பார்த்துப் பேசி (மாட்டிக் கொண்டேன்) தப்பான அட்ரஸா! அட!

வஸந்த் தன் முஷ்டியை அமுஷ்டியாக்கிக் கொண்டு விட்டான். வேறு வழி யோசித்து விட்டான்.

படி ஏறி வந்தவன் வஸந்தைத் திடுக்கிட்டு "அண்ணே இங்க ஒரு ஆள் இருக்கான்" என்றான். வாட்ட சாட்டன். மீசைக்குக் காலையில் பதினைந்து நிமிஷம் செலவழித்திருந்தது தெரிந்தது. கண்களில் சுத்தமாக நட்பில்லை.

வஸந்த் வீட்டுச் சொந்தக்காரன் மாதிரி "வாங்க" என்றான்.

"யார் நீ?"

"நல்ல கேள்வி! உபநிஷத்துகளும் வேதாந்தங்களும் இதையேதான் கேக்குது."

"யார்ரு அது குமரு?"

"தத்துப் பித்துன்னு பேசறான். சின்னப் பையன்!"

"அவனைக் கூட்டியா!"

அவன் வஸந்தின் கையைப் பற்றி அழுத்தி மடக்க "நானே சொந்தச் சக்தியிலேவர்றேனே! எதுக்கா....க கையை மடக்கறீங்க...சொன்னா வர மாட்டேனா?" என்றான்.

கீழே நான்கு பேர்கள் நின்று கொண்டிருந்தார்கள். ராமலிங்கம் இவன்தான் போலும் என்று வஸந்த் நினைத்த ஆசாமி, "யார்ரு நீ?" என்றான்.

சுஜாதா



''என் பேரு ரங்காச்சாரி. த. நாடு சமீ பத்திய சுற்றறிக்கைப்படி ஜாதிப் பகுதியை நீக்கிட்டா ரங்கா. வீட்டில கூப்பிடற து'ங்கா'.''

''எதுக்காவ உள்ளே வந்தே?''

''கதவு திறந்திருந்தது வந்தேன். நீங்க 'நெஞ்சத்தைக் கிள்ளாதே' பாத்திங்களா? சுஹாஸினி இப்படித்தான் பளிச் பளிச்சுனு பதில் சொல்லி...ஆங்! எதுக்குக் கிள்ளறீங்க?''

''திறந்த வீட்டில எல்லாம் நுழைஞ்சிடுவியோ?''

''இத பாருங்க! ஒங்க பேரு தெரியலே. ஷோலெ வர்ற ஷக்கல் மாதிரி இருக்கீங்க.''

''எம் பேரு என்னவா இருந்தா உனக்கென்னடா?''

''எனக்கு ஒண்ணுமில்லேதான். இருந்தாலும் உங்களைக் கூப்பிடறப்போ மிஸ்டர் அஜமதேயம்னு....''

''டேய், உதைடா இவனை!''

''தேவையே இல்லே. நான் இங்க வந்தது ஒரு தப்பான விலாசத்தாலே! உலகத் தமிழ் மகாநாட்டிலமுகவரின்னு சொல்லுவாங்க!''

''தப்பு அட்ரஸ்ஸா? எப்படி?''

எனக்குத் தெரிஞ்ச ஒரு சரித்திரப் பேராசிரியர்ஒரு வீட்டை அடையாளம் சொல்லி அவர் கட்டுரை ஒண்ணை எடுத்துட்டு வரச்சொன்னார். நான் அதைத் தேடிக்கிட்டுத் தப்பான வீட்டில நுழைஞ்சுட்டேன்.''

''எந்தப் பேராசிரியர்? எந்தக் கட்டுரை?''

''அதெல்லாம் இப்ப எதுக்கு கண்ணு! நான் போயிடறேனே!''

''எங்க போறே?''

''அவர் சொன்ன வீட்டைத் தேடிட்டு!''

''அந்த வீடு இதுதான்!''

''இருக்க முடியாது. அடையாளம் ஒத்துப் போகலே. அங்க மாடில டெலிபோன் இருந்தது. இமே கிடையாதுன்னாரு. இங்க வைலி வர்லா!''

''இந்த வீடுதான். மாடில எக்ஸ்டென்ஷன் தனி அறையில இருக்குது. இதைக் கொண்டு போய் அங்க மாட்டிக்கிடுவோம்!''

''அப்ப ரொம்ப சவுகரியமாப் போச்சு. அந்தக் கட்டுரையைக் கொஞ்சம் கொடுத்துடுங்க நான் போறேன்!''

''எந்தக் கட்டுரை?''

''ராஜ ராஜன் ஜெனறு!''

# வஸந்த்!





அருள்வாக்கு

## பொய், பயங்கரமான சிரங்கு!

உடல், உடை இவற்றுக்கு மேலாக ஒன்று இருக்கிறது. அதுதான் உள்ளம், மனம். மனச் சுத்தம், உள்ளத் தூய்மைதான் மிக மிக முக்கியம். அது இல்லாமல் உடம்பும் உடுப்பும் எவ்வளவு தூய்மையாக இருந்தாலும் பயனில்லை. மனசிலே அழுக்குப் படியாமல் அதை அவ்வப்போது தேய்த்துக் கழுவிக் குளிப்பாட்டிக் கொண்டே இருக்க வேண்டும்.

மனசுக்கு ஏற்படுகிற அழுக்கு என்பது என்ன? தப்பு, தவறு செய்வதுதான் உள்ளத்துக்கு அழுக்கு. நாம் செய்கிற காரியங்களில் தவறு ஏற்படக் கூடாது. அதாவது கெட்ட நோக்கங்களுக்குக் காரியம் செய்யவே கூடாது. ஆனாலும் காரியம் என்று வந்து விட்டால் நல்லதைச் செய்கிறபோது கூட அதிலே சில தப்பு, தவறுகள் நேர்ந்து விடலாம். இதனால் பெரிய குற்றம் — அதாவது தோஷம் இல்லை. ரொம்பப் பெரியவர்கள்கூட எவ்வளவோ நல்ல காரியங்கள் செய்கிறபோது அவர்களையும் கொஞ்சம் சறுக்கி விட்டிருக்கிறது. நாமே எல்லாம் செய்துகொள்ள முடியும் என்று கர்வப்படாமல் பகவான் துணையால்தான் எதையும் சாதிக்க முடியும் என்று நாம் உணருவதற்காகவே இப்படிச் சில தவறுகள் நேர்ந்து விடுகின்றன. இம்மாதிரிச் சமயங்களில் நீங்கள் பகவானை வேண்டிக் கொள்வதுதான் சரி.

ஆனால் சாதாரணமாக ஒரு தப்பு செய்த போது உங்களுக்கு என்ன தோன்றுகிறது? அது ஓர் அழுக்கு மாதிரி உங்கள் மனசையே உறுத்துகிறது. உடனே இந்த அழுக்கை யாரும் தெரிந்துவிடக் கூடாது என்று அதை மூடி மறைக்கத் தோன்றுகிறது. நியாயமாகத் தவறுதல் உண்டானவுடன் பிரார்த்தனை பண்ணினால் அந்தப் பிரார்த்தனையே சோப்பைப் போல் அந்தத் தப்பை அகற்றி விடும். அப்படிச் செய்யாமல் தப்பை மற்றவர்கள் தெரிந்து கொள்ளாமல் மூட வேண்டும் என்கிறபோது பொய் சொல்ல வேண்டியதாகிறது. அழுக்கைத் தேய்த்துக் கழுவாமல் மூடி மூடி வைத்தால் அது உடனே பழுத்துச் சிரங்காகிவிடும். அது மாதிரி தப்பை மூடியவுடன் அது பொய் என்ற சிரங்காக ஆகி விடுகிறது. உள்ளத்தை ரொம்பவும் கெடுக்கிற பயங்கரமான சிரங்கு பொய்தான்!

அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டார்கள்.

''கட்டுரை வேணும் உனக்கு?'' என்று அருகே வந்தவன் வஸந்தைக் கன்னத்தில் புறங்கையால் அடித்தான்.

''இத பாருங்க தலைவரே! இது அநியாயம்தானே? திருப்பி அடிக்க எத்தனை நேராளம் ஆகும்?''

இதற்குள் ராமலிங்கம் என்று பேசப்பட்ட நடுநாயகன் வசந்தின் தோளில் தட்டிக் கொடுத்து, ''ரங்காச்சாரியா நீ? திருப்பி அடிப்பியா? எங்கே அடி?'' என்றான்.

''அடிப்பேன். ராகுகாலமா இருக்கேன்னு பார்க்கறேன்.''

''ராஜ ராஜன் இன்னான்னு என்ன தெரியுமா?''

''ஓ அதுவா? வந்து ராமலிங்கம் ஸார், செங்கல்பட்டு பக்கம் உக்கல்ங்கற கிராமத்துக்குப் பக்கத்திலே ஒரு இன்னு. அது மாமண்டூர்ல எக்ஸ்பிரஸ் பஸ்ல டிபன் சாப்பிடறதுக்கு இறங்குவோம் பாருங்க? அங்க இருந்து தெற்கே போனீங்கன்னு.... டெலிபோன் அடிக்குது விசாரியுங்க.''

ராமலிங்கம் டெலிபோன் அருகே செல்ல வஸந்த் மற்றவர்களைப் பார்த்து ''உங்க நாலு பேர்ல என்னை அடிச்சது யாரு?'' என்றான். அவர்கள் அவனை மேலும் விரோதமாக நோக்கினார்கள்.

''விஷயம் தெரிஞ்சவன் போலத்தான் இருக்குங்க. கட்டுரைக்காக வந்தேன்கறான்....''

''சின்னப் பையன். இருபது இருபத்திரண்டு இருக்கும்.''

''இருபத்தி மூணுங்க'' என்றான் வஸந்த்.

''ம்ம்! அப்படியே செய்துறலாம்... அப்படியே செய்துறலாம்....''

டெலிபோனைக் கவனமாக வைத்துவிட்டுச் சிந்தனையுடன் ராமலிங்கம் திரும்பி வர வஸந்த் ''அப்படியே செய்துறலாம்னு புரியலையே'' என்றான்.

''உனக்கு வேளை சரியில்லை.''

''இல்லையே! முந்தாநேத்துத்தானே தேவியில் வெயிட் பார்த்தேன். 'நீ தற்போது எடுத்துக்கொள்ளும் முயற்சிகள் வெற்றியடையும்'னு போட்டிருந்தது.''

''போட்டிருந்ததா? அதை நெத்தில ஒட்டிக்க. ஏய்! பின்பக்கம் ஷெட்டண்டை போய்க் கயிறு கொண்டா.''

''கயிறு எதுக்கு?''

''அப்படியே ஒரு கத்தியும் கொண்டா!''

''கத்தி எதுக்குன்னு சொல்லாதீங்க.''

''ஆளைப் பிடிங்கடா!''

உடனே இருவர் அவனைப் பிடித்தார்கள். சரியான கொரில்லாப் பிடி. ''விடு! விடு! யோவ் நீ உருப்படுவியாய்யா?'' என்று ஏறக்குறைய அந்தரத்தில் காலை உதறினான். அவர்கள் கைப்பிடியைத் தளர்த்தவில்லை. ராமலிங்கம் உள்ளேயிருந்து மஞ்சளாக வளையம் கொண்டு வந்தான். அதிலிருந்து பத்து சென்டி மீட்டர் நீளத்துக்குப் பட்டை பிரித்துக் கொண்டான்.

''என்னது மாஸ்கிங் டேப்பா? இதெல்லாம் எதுக்கு? வேண்டாம் வேண்டாம்... வே....''

வசந்த் வாயில் சில்லைக்கப் பட்டான். கொண்டுவரப்பட்ட கயிற்றால் அவன் கைகள் பின்புறம் கட்டப்பட்டு' கால்கள் கட்டப்பட்டு இரண்டும் இணைக் கப்பட்டு. தோராயமாக ஒரு கால் பந்து அளவுக்கு வஸந்த் சுருட்டப்பட்டு. உருட்டப் பட்டு. உபரியாகத்தோளில் ஒரு முறை வெட் டப்பட்டு மண்டையில் தட்டப்பட்டு...

அவர்கள் கதவுகளைப் பூட்டும் சப்தமும் வெளியே கார் புறப்படும் சப்தமும் வஸந் துக்கு அரை மயக்க நிலையில் கேட்டது.

அறையின் மெலிதான இருட்டில் ஏதோ ஒரு சர்க்கஸ் கன்னியின் நிலையில் இருந்த வஸந்த் கூடுமான வரையில் சுற்றிலும் பார்த்தான். ஒரே ஒரு உச்சாணி ஜன்னலி லிருந்து சூரிய வெளிச்சம் சரிந்தது. அந்த வெளிச்சத்தில் அறையில் பழைய செய்தித் தாள்களும் டிரஸ்ஸிங் டேபிளில் பொருத் தப் பட்ட நிலைக்கண்ணாடியும் இருப்பது தெரிந்தது. கணேஷ் நான் வரவில்லை என்று எப்போது கவலைப்பட ஆரம்பிப் பார்? சாயங்காலம் ஐந்து அல்லது ஐந் தரைக்குத்தான். சுத்தமாக ஏழு மணி நேரம் பாக்கி இருக்கிறது. அதுவரை இந்த மயூராசனத்தில் இருந்தால் உடம்பு ஸ்திர மாகவே இப்படி ஆகிவிடும். கோர்ட்டுக்குப் போக முடியாது. காதல் செய்ய முடியாது. யோசி! எப்படித் தப்பிக்கப் போகிறாய்? முத லில் கைகள்! அவைகளை விடுவிக்க வேண்டும். அசைத்துப் பார்த்தான். குழந்தைகளின் ஆடு குதிரை போலத்தான் அசைய முடிந் தது. எங்கெங்கோ வலித்தது. உதடு களை என்ன என்னவோ அசைத்துப் பார்த் தான். வாயில் வைத்த சில் 'பச்சக்' என்று ஒட்டிக் கொண்டிருந்தது. வேலை சுத்தம். பொட்டலமாகக் கட்டி வைத்துவிட்டுப் போய்விட்டார்கள்.

ஜன்னல் வழி சூரிய ஒளி சர்வ காட்ட மாகவே எட்டிப் பார்த்தது. அதனருகில் உருண்டு சென்று சற்று நேரம் அதன் 'கன்'னில் மூஞ்சியைக் காட்டினான். கன்னத் துப் பக்கம் ஒட்டியிருந்த டேப் சற்றே இள கினாற்போல் தெரிந்தது. அந்த இளகலைத் தோள் பக்கம் கட்டியிருந்த கயிற்றின் நரநரப்பில் தேய்த்தான். இளகல் விலகல் ஆகியது. மறுபடி சூரிய வெளிச்ச சூடுபண்ணி வாயை விதவித பாவனைகளில் அசக்கி, கயிற்றில் தேய்த்துத் தேய்த்து ஒரு வழியாக வாயை அடைத்திருந்த டேப்பை முழுவதும் விலக்கிவிட்டான்.

சற்று நேரம் ஆசுவாசப்படுத்திக்கொண்டு ''காப்பாத்துங்க! காப்பாத்துங்க!'' என்று கத்திப் பார்த்தான். ம்ஹூம். ஒரு இலை அசங்கவில்லை. கூச்சல் வெளியே கேட்கலை.

வஸந்த் யோசித்தான். மூன்று முறை உருண்டு குட்டிக்கரணித்தான். மூன்றாம் முறை அவன் பையிலிருந்த நெருப்புப் பெட்டி வெளியே விழுந்தது. அதைக் கடித்துக் கொண்டு தலையை ஆட்டி ஆட்டி உதிர்த்தான். மருந்து தடவிய பெட்டிப் பகுதியை மூக்கால் தள்ளி ஒரு ஸ்டூலின் காலருகே நகர்த்தி அமைத்துக் கொண்டான். பல்லில் நெருப்புக் குச்சியைக் கடித்துக் கொண்டு பெட்டியின் மருந்துப் பகுதியின்



அவள்: உன் பையன் கழுதை கத்தற மாதிரி . கத்தினானே அழுகையை நிறுத்த என்ன செஞ்சே?

இவள்: பேப்பர் ரோஸ்ட் வாங்கிக் கொடுத்தேன்!

- கடலூர் கன்னியப்பன்

மேல் தேய்த்துத் தேய்த்து உடனே குச்சியைத் துப்பினான்.

நான்காவது குச்சி பற்றிக்கொண்டு எவ்விச் செய்தித் தாளின் மேல்விழுந்து மெல்ல நெருப்புப் படர்ந்தது. வஸந்த் இப்போது டேக்கிக்கொண்டு நிலைக் கண் ணாடி அருகே சென்றான். மண்டையால் முட்டி அதன் சாய்வைச் சற்று மாற்றி நெருப்புத் தெரியுமாறு அமைத்துக் கொண்டு கண்ணாடியில் கவனித்துப் பார்த்து...

''அப்படியே பின் கையில் கட்டியிருந்த கயத்தை முதல்ல எரிச்சுட்டேன் பாஸ். கையை விடுவிச்சுக்கிட்டேன். அப்புறம் கால் கட்டை அவுத்துக்கிட்டேன். எழுந்து நின்னேன். உடம்பெல்லாம் வலி! நெருப்பை அணைச்சேன். கொஞ்ச நேரம் உக்காந்து ரெஸ்ட் எடுத்துக்கிட்டேன். அப்புறம் கதவை ராமலிங்கம் மண்டையை நினைச்சுக்கிட்டு டமால் டமால்னு நாலு சாத்து. பிளந் துக்கிச்சு. அதுக்கப்பறம் கலபம்.

கணேஷ் அவன் முகத்தைப் பார்த்தான். ''ஸாரி வஸந்த். கன்னத்திலே சிராய்ப்பு... கைல காயம். இந்தா பர்னல் போட்டுக்க. விஷயம் இவ்வளவு தீவிரம்னு தெரிஞ்சா நானும் கூட வந்திருப்பேன்.''

''நீங்க கூட வந்திருந்தீங்கன்னா கதையே மாறியிருக்கும். தனியாப் போய் மாட்டிக் கிட்டேன். பாஸ் வேண்டாம். விட்டுறலாம். பேராசிரியருக்குக் கட்டுரை கிடைக்கலைன்னு சொல்லிறலாம்.''

''ம்ஹூம். வஸந்த் இந்த விஷயம் எனக் கென்னவோ இன்ட்ரஸ்டிங்கா இருக்குது. உன்னை அந்த மாதிரி ட்ரீட் பண்ணதுக்கு அவங்களுக்கு ஏதாவது பாடம் தரவேண் டாம்? கொஞ்சம் விசாரிக்கப் பார்க்கலாம். என்ன தயாரா?''

வஸந்த் மலர்ந்து, ''நீங்க சொன்னா தயார் பாஸ்! அந்தத் தே... ஸாரி விலைமகன் மகன்களுக்குப் புத்தி வரவேண்டாம்? ரெண்டு ஆள் என்னைப் புடிச்சிக்கிறான் பாஸ். ஒரு வஸ்தாது தர்ம அடி அடிக்கிறான்!'' என்றான்.

''வஸந்த் இன்னிக்கு என்ன கிழமை?''

''திங்கள். நாளைக்குக் கேஸ் எதுவும் கிடை யாது நமக்கு.''

கணேஷ் சிரித்து ''அடுத்த கேள்வியை எதிர் பார்க்கறதிலே எக்ஸ்பர்ட் நீ. சரி. முதல்ல ராத்திரி ப்ரொபஸரைப் போய்ப் பாரு. அந்தக் கிணறு பத்தி மேல் விவரம் தெரிஞ் சுக்க. அந்தக் கட்டுரையில என்னதான் எழுதியிருந்தார், அது என்ன ஆராய்ச்சி, எல்லாத்தையும் தெரிஞ்சுக்க.'' என்றார்.

''சரி பாஸ்! டன்! அதுக்கப்பறம்?''

''நாளைக்கு நாம ராஜ ராஜன் கிணத் துக்குப் போறோம்.'' (தொடரும்)

# திரைப்பட விழா:

**PASCEOAL DUARTE (SPAIN)**
ஒரு சர்வதேச திரைப்பட விழாவுக்கு இம்மாதிரிப் படத்தை எப்படி ஏன் தேர்ந்தெடுத்தார்கள் என்பது ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்.
கதாநாயகனின் தகப்பனார் இறக்கிறார். சகோதரி விபசாரி ஆகிறாள். இவன் முதலில் தன்னுடன் இருந்த நாயைக் கொல்கிறான். அடுத்து தன் மனைவியைக் கீழே தள்ளிக் கொன்றதற்காகத் தன் குதிரை மீது கோபம் கொண்டு அதைக் கொல்கிறான். பிறகு தன் சகோதரியை வைத்துக் கொண்டிருந்தவனைக் கொல்கிறான். எல்லாவற்றுக்கும் சாட்சியாக இருந்த தன் தாயைக் கொல்கிறான். போதாக் குறைக்கு அந்த ஊரின் பெரிய மனிதரைக் கொல்கிறான். கடைசியில் அவனைக் கழுவில் ஏற்றுகிறார்கள்.
கொலை எல்லாமே கொடூரமாகப் படமாக்கப் பட்டிருக்கின்றன. பார்ப்பவர் மன ஆரோக்கியத்தைப் பாதிக்கக் கூடிய ஆபத்தான படம்.

**A DISTANT CRY FROM SPRING (JAPAN)**
தெளிந்த நீரோடை போல் செல்கிறது படம்.

## அமெரிக்காரன்

ஓர் இளம் விதவை தன் குழந்தையுடன் ஊருக்கு ஒதுக்குப்புறமாக வசிக்கிறாள். ஒரு நாள் இரவு அந்நிய மனிதன் ஒருவன் கதவைத் தட்ட அவனுக்கு உணவும் உறைவிடமும் கொடுத்து உபசரிக்கிறாள். அவன் அங்கேயே தங்கி அவளுக்குத் துணையாக வீட்டு வேலைகள் எல்லாம் செய்கிறான்.
பல வருடங்களுக்குப் பிறகு ஒரு நாள் விதவையிடம் தான் ஒரு கொலை செய்தவன் என்று கூறிவிட்டுச் சிறைக்குப் போகிறான். அவன் திரும்பி வரும்வரை காத்திருப்பதாகக் கூறுகிறாள்.

**APOCALYPSE NOW (U.S.A.)**
அமெரிக்கா இந்த நூற்றாண்டில் செய்த மிகப் பெரிய தவறு வியட்நாம் போரில் ஈடுபட்டதுதான் என்று அமெரிக்கர்கள் பலரே கருதுகின்றனர். தார்மீக ரீதியில் அவர்கள் போரில் இறங்கியது சரியாக இருக்கலாம். ஆனால் அவர்கள் யுத்தத்தின் போது நடந்து கொண்ட விதம் கண்டனத்துக்குரியதாகப் பல அம்சங்களில் அமைந்துவிட்டது.
அமெரிக்க ராணுவ கர்னல் (மர்லான் பிராண்டோ) எல்லை தாண்டி கம்போடியாவில் தனக்கென்று ஒரு தலைமையகம் அமைத்துக் கொண்டு தமக்கு யார் இடையூறு பண்ணினாலும் சண்டை போடத் தயாராக இருக்கிறார். இந்தப் புரட்சி மனப்பான்மையை அனுமதிக்க முடியாத ராணுவத் தலைமையகம் கர்னலைக் கொன்றுவிடத் திட்டமிட்டு அதற்கு ஒரு காப்டனை அனுப்புகிறது.
20 நிமிடமே தோன்றும் பிராண்டோ பெற்ற தொகை நாலு மிலியன் டாலர்! வியட்நாம் யுத்தத்தில் எப்படி ஊதாரித்தனம் தலைவிரித்தாடியதோ அப்படி இந்தப் படப்பிடிப்பின்போதும் ஊதாரித்தனம் மலிந்திருந்தது என்று இதன் தயாரிப்பாளர் டைரக்டர் கப்போலாவே ஒப்புக்கொண்டிருக்கிறார்.

✗ திரைப்படவிழாவில் போராட்டம். பிரதிநிதிகள் எல்லோரும் வெளியேறுவோம் என்கிறார் முக்தா சீனிவாசன் (விவரங்கள் சென்ற இதழில்) புகைப்படங்கள்: ரவி.





✗ கண்ணீரில் மாஸ்கோவுக்கு நம்பிக்கை உண்டு!

யுத்தத்தில் காண்பிக்கப்படும் வீர சாகசங்களை விட முக்கியமாக அதன் கொடுமைகளையும் கொடூரங்களையும் விளக்கி விமர்சிக்கும் படம். அமெரிக்காவின் ஆன்ம பரிசோதனை!

**ESCAPE FROM ALCATRALZ (U.S.A.)**
'கிரேட் எஸ்கேப்' போன்று சிறையிலிருந்து தப்பிச் செல்வதை ஒரு சவாலாக ஏற்று வெற்றி பெறும் கைதியின் கதைதான் இதுவும். கிளிண்ட் ஈஸ்ட்வுட்

இப்படத்துக்கு உயிரளிக்கிறார். ஏற்கனவே நாம் அறிந்த அதே கதைக் கருதான் என்றாலும் யுக்திகள் வித்தியாசமானவை. சென்னைக்கு இப்படம் வரத்தான் போகிறது. முண்டியடித்துக் கொண்டு பார்க்கத்தான் போகிறோம்.

**KOSTAS (AUSTRALIA)**

ஓர் ஆபத்தில் சிக்கும் கிரேக்கப் பத்திரிகையாளர் ஆஸ்திரேலியாவுக்குத் தப்பிச் சென்று டாக்ஸி டிரைவராக வேலை செய்கிறார். ஒரு பெண்ணைப் பார்த்து மனத்தைப் பறிகொடுக்கிறார். எப்படியாவது

✖ திரைப்படவிழாவில் போராட்டம்! புரொஜக்டர் துவாரம் மறைக்கப் படுகிறது!





✖ "கோஸ்டாஸ்"

அவளை அடைய முற்படுகிறார். அந்தப் பெண்ணோ இவரைப் பார்க்கவே மறுக்கிறாள். கடைசியில் இருவரும் எப்படி இணைகிறார்கள் என்பதுதான் கதை. ஒளிப் பதிவும் நடிப்பும் உயிர்த் துடிப்புடன் இருந்தும் சம்பவங்கள் சரியாக அமையாததால் படம் சப்.

**MOSCOW DOES BELIEVE IN TEARS (U.S.S.R.)**

குழந்தை கொடுத்தவன் தலைமறைவாகிவிட குழந்தை வளர்ந்து வரும்போது மனத்தை வேறொருவரிடம் பறிகொடுக்கிறாள் காதலி. இந்த நிலையில் குழந்தையின் தகப்பன் திரும்பி வருகிறான். உரிமை கொண்டாடுகிறான். உண்மையாகவே இவளை விரும்பிய இரண்டாவது காதலன் தான் இடையூறாக இருக்க வேண்டாம் என்று கிளம்பிப் போய் விடுகிறான். ஆனால் காதலியின் தோழிகள் அவனைத் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து நிறுத்துகிறார்கள். மெய்யான காதல் வெற்றி பெறுகிறது. சம்பவங்கள் உயிர்த் துடிப்புடன் உணர்ச்சிகரமாக உள்ளன.

**DEATH WATCH (FRANCE)**

1980ஆம் ஆண்டின் சிறந்த பிரெஞ்சுப் படம் என்று பெயர் பெற்றது. நவீன விஞ்ஞானத்தின் உதவியுடன் ஒருவனது கண்ணை காமிராவாகிற அதீத கற்பனை. அவன் மூளைக்குள் ஒளிப்பதிவும் நிகழ்கிறது! ட. வி. நிலையத்தினர் ஒரு மரணத்தைப் படம் பிடிக்க விரும்புகின்றனர். இதற்காகச் சில நாட்களில் மரணமடையப் போகும் ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுக்

## ஆன்ம பரிசோதனை!

கின்றனர். சில தினங்களே தனக்கு வாழ்வு என்று அறிந்த அப்பெண் எப்படி நடந்து கொள்கிறாள், என்ன பேசுகிறாள்? என்று அவளே அறியாதவாறு ஒளி, ஒலிப் பதிவு செய்யக் காமிராக் கண்ணனை அனுப்புகின்றனர். படம் சுவாரஸ்யமாக இருக்க வேண்டும் என்பதற்காக அவளைப் பல விதங்களில் தூண்டி விடுகிற அவன் கடைசியில் அவளிடமே காதல் கொள்கிறான். அவளைப் பற்றிய திரைப் படத்தை வெளியிடுவது அவளுக்கு இழைக்கப்படும் பெரும் கொடுமை என உணர்கிறான். ட. வி. நிலையத்தினருக்கு அவளைக் காட்டிக் கொடுக்க விரும்பாமல் தன் கண்களைத் தானே குருடாக்கிக் கொள்கிறான். கடைசியில் ஒரு எதிர்பாராத திருப்பம்!

**MANHATTAN (U.S.A.)**

நியூயார்க்கின் ஒரு பகுதி மான்ஹாட்டன் தீவு. செல்வச் செழிப்பு மிக்க நகரத்தின் மக்களிடம் உள்ள குறைகளை அங்கத பாணியில் நகைச்சுவையுடன் விமர்சிக்கிறார் டைரக்டர், தயாரிப்பாளர், நடிகர் உட்டி ஆலன்.

—சலன்

## ஜி எச் வாசகர் கருத்து



● மூன்றெழுத்து நாயகர் படைத்த ஈரெழுத்துக் காவியம்! இருபத்தைந்து வருடங்கள் ஆனாலும் மக்களின் மனத்தில் இருந்து மறையா ஓவியமாக விளங்கப்போகும் 25 அத்தியாயங்கள்.

மாயூரம் — இரம. வாஞ்சிநாதன்

● 25 வாரம் போனதே தெரியவில்லை. பாராட்டுக்கள். பி.வி.ஆர். — ஜி. எச். கதைக்கு மாருதியின் ஓவியம் மேலும் மெருகூட்டியது.

சென்னை-33 — கே. பாபு

● அரசு மருத்துவ மனையை நோயாளிக்கு மட்டும் இல்லாமல், ஒரு புனிதக் காதலின் பிறப்பிடமாகவும் உருவாக்கி எங்களுக்குத் தந்த பி. வி. ஆருக்கு இனிய வாழ்த்து. ஆனாலும் அம்மணியை நினைத்தால் என் மனம் ஏனோ மிகவும் வருத்தப்படுகிறது.

செலக்கரிச்சல் — ச. முத்து

● பி. வி. ஆர். இந்தக் கதையை எழுதுவதற்கு முன் களத்தை ஆராய ஜி. எச்.சில் சில நாளேனும் தங்கி இருந்திருப்பார் போலிருக்கிறது. நம்மையும் சில மாதம் அங்கு அழைத்துச் சென்றுவிட்டார். கதை வெகு அருமை. பாடலுக்கு ஏற்ப இசை அமைப்பது போல் கதைக்கு ஏற்ப அழகாகப் படம் வரைந்திருக்கிறார் மாருதி.

தஞ்சை — கே. ஆர். மனோகர்

● ஜி. எச்.சில் ஆரம்பித்துக் கடைசியில் ஜி. எச்.லேயே முடித்துவிட்டார். ஜி.எச்.சின் உயிர்நாடிகளான டாக்டர்கள், நர்சுகளை அறிமுகப்படுத்தி இன்-பேஷண்டான மாப்பிள்ளையைச் சுற்றிச் சுவையான நாவலைத் தொடுத்துவிட்டார் பி.வி.ஆர்.

திருநெல்வேலி — கே. ருக்மணி

● 'ஜி.எச்.' தொடர்கதை எதிர்பார்த்த அளவுக்கு விறுவிறுப்பாக அமையவில்லை. பி. வி. ஆர். அவர்களின் முத்திரை குறிப்பிடும் படியாக ஏதும் இல்லாதது வருந்தத் தக்கது. மிகவும் அழகான ஓவியங்களை அளித்த மாருதிக்கு எங்கள் பாராட்டுக்கள்!

லெட்சுமாங்குடி — ஏ.கே. நாசர்

● எந்த இடத்தை மையமாக வைத்துக் கதையைப் புனைந்தாலும் அந்த இடத்தின் வரலாற்றையும் திறமையாக அவருக்கே உரிய பாணியில் அறிமுகப்படுத்தும் பி.வி.ஆர்., இம்முறையும் ஜி.எச். நாவலை அவசரக் கோலாக்கிவிடாமல் நன்கு தேற்றி சுபமாக வாசகர்களுக்கு அளித்ததற்காகப் பாராட்டு.

பெங்களூர்-5 — அ. குமார்

---

## இம்சைகள்

### நாடக விமரிசனம்

**மா**ர்க்குவெய்னும் சிரிக்க வைக்கத்தான் எழுதினர்; லாரல் ஹார்டியும் சிரிக்க வைக்கத்தான் நடித்தார்கள்.

புத்திசாலித்தனமான வசனங்கள், திறமையான நடிப்பு மூலம் சிரிக்க வைப்பது ஒரு வகை. அபத்தமான கதை — வசனம்; பித்துக்குளித்தனமான நடிப்பு ஆகியவற்றால் சிரிக்க வைப்பது மற்றொரு வகை.

ஒரு வகையினை விரும்புவோருக்கு மற்றொரு வகை இம்சை!

அனுராதா ரமணன் எழுதிய இம்சை நாடகத்தில் கதாபாத்திரங்கள் எல்லாருமே அசடுகளாக இருக்கிறார்கள். ''இதென்ன இம்சை'' என்று சில ரசிகர்கள் அலுத்துக் கொள்ளும்போது வேறு பல ரசிகர்கள் கொல்லென்று சிரித்துக் கைதட்டுகிறார்கள். 'அசடாக நடிப்பதற்கும் ஓர் ஆற்றல் வேண்டும். அந்தத் திறமை நடிகர்களிடம் நன்கு மிளிர்கிறது' என்று இம்சைப்பட்ட ரசிகர்களும் புரிந்து கொள்கிறார்கள்.

நாடக மேடையில் நாம் அடிக்கடி சந்தித்துள்ள சந்துரு, நளினி, லலிதா, ஜெமினி மகாலிங்கம், சுந்தர், கூத்தபிரான் முதலியவர்கள் இடைவிடாமல் அசடுகளாக நடித்து அவையோரிடம் இடைவிடாத கலகலப்பை ஏற்படுத்துவதில் வெற்றி பெறுகிறார்கள்.

புது முகம் ஸ்ரீவித்யா அசடுகளிலெல்லாம் சூப்பர் அசடாக ஜமாய்க்கிறார். அவருக்கு ''உலக மகா அசடு'' என்று பட்டமே வழங்கலாம் —

நாடகம் முடிந்து அரங்கை விட்டு வெளியேறும்போது நம் முகத்தில் அசடு வழியாமலிருந்தால் சரி.... ஸாரி, சரி.

—குட்டி கிருஷ்ணன்








சுப்பனுடைய எதிர் வீட்டில் குப்பன் குடியிருந்தான். சுப்பன் நல்ல தெய்வ பக்தி உடையவன். தேனியைப் போல் ஓயாது ஒழியாது உழைப்பவன். உண்மையும் நேர்மையும் உடையவன். துன்பத்தால் துடிக்கும் ஏழை எளியவர்களுக்கு உதவுகின்ற உள்ளம் படைத்தவன். சஷ்டி விரதம் இருந்து கந்தவேளை வழிபடுவான். இத்தகைய சுப்பன் தெய்வத் திருவருளால் தொழில் வளம் பெற்று மேன்மேலும் செல்வம் பெருகிச் செம்மையுடன் வாழ்ந்தான்.

குப்பன் இதற்கு நேர் மாறானவன். இரக்கம் இல்லாத அரக்கன். சூதும் வாதும் வஞ்சனையும் உடையவன். சுப்பனுடைய வளமையைக் கண்டு உள்ளம் புழுங்கிப் பொறாமைக் கனலால் வெதும்பினான்.

அவ்வித்து அழுக்காறு உடையானைச்
செய்யவள்
தவ்வையைக் காட்டிவிடும்

என்ற திருவள்ளுவரின் திருவாக்கின்படி பொறாமைப் பேய் பிடித்த குப்பன் நாளுக்கு நாள் வறுமையாகிய சிறுமையால் வாடினான். சுப்பன் தன் ஓடு மூடிய வீட்டை மாற்றி அழகாக மச்சு வீடாகப் புதுக்கினான். அதில் அழகிய வர்ணங்கள் தீட்டினான். அவன் வீட்டில் பல ஏவலர்கள் இருந்து பணி செய்தார்கள். உயர்ந்த ஆசனங்களும், விளக்குகளும் நிறைந்திருந்தன. வீட்டின் பின்புறத்தில் பல பசுக்கள் பால் கறந்தன. சுப்பன் உயர்ந்த-வாகனங்களில் பிரயாணம் புரிவதைக் கண்டு குப்பன் பெரிதும் அழுக்காறு கொண்டான். சுப்பனைக் கெடுப்பதற்கு என்ன வழி என்று நெடிது சிந்தித்து, ஒரு முடிவுக்கு வந்தான்.

அந்த ஊருக்கு அருகில் உள்ள மலையடிவாரத்தில் குள்ளன் என்ற கள்ளன் ஒருவன் இருந்தான். குப்பன் அவனிடம் சென்று பத்து ரூபாய் நோட்டு நூறு அடங்கிய ஒரு கட்டு கொடுத்தான். "அன்பனே! என் எதிர் வீட்டில் சுப்பன் என்ற கொடியவன் இருக்கிறான். அவன் மிக்க கர்வம் படைத்தவன். அவனை அடியோடு அழிக்க வேண்டும். அமாவாசை யன்று அவன் வீட்டில் மண்ணெண்ணெய் ஊற்றித் தீவைத்துவிடு. அதற்காக இந்த ரூபாயை வைத்துக்கொள்" என்றான்.

கள்ளன், "ஐயா, சுப்பன் வீடு எனக்குத் தெரியாதே! தெரிந்தால்தானே நான் தீ வைப்பேன்."

"என் வீடு தெரியுமா?"

"அதுவும் தெரியாதே."

"எங்கள் தெருவில் உள்ள பிள்ளையார் கோவில் தெரியுமா?"

"தெரியும்."

"அந்தப் பிள்ளையார் கோவில் தெருவில் இருக்கிறது என் வீடு. என்னுடைய வீட்டுக்கு எதிரில் சுப்பனுடைய வீடு. 115ம் நம்பர் வீடு."

"ஐயா! எனக்குப் படிப்புக் கிடையாது. பகலில் வந்தால் என்னைக் காவல் துறையினர் பிடித்துக் கொள்வார்கள். காவல் துறையினர் என்னை நீண்ட காலமாகத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். நான் இந்தக் குகையில் ஒளிந்து கொண்டிருக்கிறேன். நான் காகிதத்தில் ஒரு தாமரைப் பூ செய்து வைத்திருக்கிறேன். அதை அமாவாசையன்று இரவு சுப்பன் வீட்டு ஓட்டில் செருகி வைத்துவிடு. நான் நடு நிசியில் வந்து தாமரைப் பூ இருக்கிற வீட்டில் தீவைத்துக் கொளுத்தி விடுவேன்."

குப்பன் சரியென்று கூறிவிட்டு வெகு மகிழ்ச்சியுடன் தாமரைப் பூவைக் கொண்டு வந்து தன் வீட்டுக் கூடத்தின் மாடத்தில் வைத்தான்.

அவன் மனைவி, "இது என்ன பூ?" என்று கேட்டாள். "பெண்ணே! இது மந்திரக்-காகிதப்-பூ. இதன் விலை ஆயிரம்-ரூபாய். இது இருக்கின்ற வீடு கிடுகிடுவென்று மேன்மையடையும்." என்றான்.

அமாவாசையன்று குப்பன் கள்ளனிடம் போய் அவனுக்கு ஞாபகப்படுத்தி மது பானம் செய்யப் பத்து ரூபாயும், தெருவிலும், தோட்டத்திலும், வெளியில் பூட்டுவதற்கு இரண்டு காத்ரேஜ் பூட்டும், நாலு டின் மண்ணெண்ணெயும் வாங்கிக் கொடுத்துவிட்டு வந்தான்.

அன்று அமாவாசை. சுப்பன் கோயிலுக்குச் சென்று முருகனுக்கு அபிஷேகம் செய்துவிட்டு, ஜரிகைக் கரை யுடைய பட்டாடை உடுத்திக் கொண்டு, உயர்ந்த வாகனத்தில் வந்து வீட்டுக்குள் சென்றான். இதைக் கண்ட குப்பன் பொறாமைத் தீயால் புழுங்கினான். "சுப்பா! ம்... நாளைக் காலையில் நீ குடும்பத்தோடு வெந்து சாம்பலாகி யிருப்பாய். உன் வாழ்வு இன்று இரவோடு முடிந்து விட்டது" என்று தனக்குள் கூறிக் கறுவிக்கொண்டான்.

இரவு பதினொரு மணி. ஊரில் ஓசை அடங்கி எங்கும் மௌனம் நிலவியது. இருள் சூழ்ந்திருந்தது. குப்பன் காகிதப்

பூவைக் கொண்டு போய் சுப்பன் வீட்டு முகப்பில் செருகிவிட்டுப் படுத்துக்கொண்டான்.

இரவு பன்னிரண்டு மணிக்கு சிறுநீர் கழிக்க வெளியே வந்த குப்பன் மனைவி காகிதப் பூ சுப்பன் வீட்டு முகப்பில் இருந்ததைக் கண்டு திகைத்தாள்.

"ஆகா! இந்த மந்திரக் காகிதப் பூ நம் வீட்டில் இருந்ததே! இது இருக்கிற வீடுதானே செல்வ நலம் பெருகி வளர்ச்சி அடையும்! இது எப்படி இங்கு வந்தது? என் மந்திரக் காகிதப் பூவே! நீ என் வீட்டுக்கு வருக!" என்று கூறி அந்தக் காகிதப் பூவை எடுத்துத் தன் வீட்டின் ஓட்டில் சொருகி வைத்துவிட்டு உள்ளே போய் நிம்மதியாகப் படுத்து உறங்கி விட்டாள்.

இரவு சரியாக ஒரு மணிக்குக் குள்ளன் அந்தத் தெருவில் வந்து, எந்த வீட்டில் காகிதப் பூ இருக்கிறது என்று ஆராய்ந்து பார்த்துக் கொண்டு வந்தான். அவனுக்கு எது குப்பன் வீடு, எது சுப்பன் வீடு என்று தெரியாது. குப்பன் வீட்டில் காகிதப் பூ இருப்பதைக் கண்டான். அதுதான் சுப்பன் வீடு என்று எண்ணிக் கொண்டான். தெருப் பக்கமும், தோட்டத்துப் பக்கமும் வெளிப் பக்கத்தில் பூட்டினான். நாலு டின் மண்ணெண்ணெயை வீட்டில் கொட்டினான். தீ வைத்துவிட்டுக் குகைக்குப் போய்விட்டான். குப்பன் வீடு எரிந்து சாம்பலாயிற்று.

குப்பன் பொறாமையால் குடும்பத்துடன் அழிந்து சாம்பலானான். ஆதலால் தன் வினை தன்னைச் சுடும்.

உலகிலேயே பிரமாண்டமான தயாரிப்பு என்ற ஆர்ப்பாட்டத்துடன் வந்துள்ள படம்.

35 எம்.எம்.க்குப் பதில் 70 எம்.எம். ஆக இருப்பதும், ஒரு ஹீரோவுக்குப் பதில் மூன்று ஹீரோக்கள் இருப்பதும், இரண்டு நாய்களுக்குப் பதில் இருபது நாய்கள் துரத்துவதும், இரண்டு மணி நேரத்துக்குப் பதில் மூன்றரை மணி நேரம் ஓடுவதும் தவிர பிரம்மாண்டம் ஏதுமில்லை.

கொஞ்சமும் மாற்றமில்லாத டிபிகல் ஹிந்திப் படம். நம்ப ஊர் கொள்ளைக் கூட்ட பாஸ் ஓ.ஏ.கே. தேவர் செய்ததை இந்த மொட்டை வில்லன் நவீன வசதிகள் உபயத்தால் வெளிநாட்டுத்தனத்துடன் விஸ்தாரமாய்ச் செய்கிறான். தலையைத் தடவிக்கொண்டு லேசாய்ச் சிரிப்பதில் லேசாய் புதுமை.

கொள்ளைக்காரன் ஷாக்கலைப் பிடிக்க முயன்று இன்ஸ்பெக்டர் உயிரிழக்க அவரின் இரண்டு தம்பிகள் பழி வாங்குகிறார்கள். ஷஷிகபூர் பெண்ணை வர்ணிக்க, அமிதாப் காரை வர்ணிப்பதும், மாபெரும் நான்கு லாரிகள் காரை எலிக் குஞ்சு போல் அபேஸ் செய்வதும், தீ விபத்துகளும், அமிதாபின் கடை உடைப்பும் குறிப்பிடும் இடங்கள்.

அசடு வழியும் அமிதாபும் ஆக்ரோஷமான சத்ருகனும் பரவாயில்லை. வழக்கம் போல் ஹீரோக்கள் நடனமாடுவது போல் குகைக்குள் நுழைகிறார்கள். துப்பாக்கிச் சண்டை போடுகிறார்கள். மற்றபடி எந்தப் பாத்திரப் படைப்பிலும் ஓர் அழுத்தம் இல்லவே இல்லை.

இரண்டு பாடல்கள் பரவாயில்லை. கடைசி சண்டை உட்பட படத்தில் அப்படி ஒன்றும் பிரமாதமாய் இல்லை. புதிசாய் இல்லை.

— நளினி சாஸ்திரி



# கழுத்தில் விழுந்த மாலை



லக்ஷ்மி

## 2

கல்யாண மண்டபத்தில் சாப்பாட்டுப் பகுதியைக் கஸ்தூரியின் அண்ணன் வேதாசலம் கவனித்துக் கொண்டிருந்தார். இருந்தாலும் பெண் வீட்டவர்களைச் சீராகக் கவனித்து உபசரிக்க மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தாள் கஸ்தூரி. கல்யாணத்துக்குச் சில நாட்கள் முன்னாலேயே அவளுள் ஒரு கலவர உணர்வு உருவாகி விட்டிருந்தது. மகனிடமோ, அவளுக்கு உதவ வேண்டி மதுரையிலிருந்த தமது குடும்பத்துடன் வந்திருந்த அண்ணனிடமோ பேசித் தெளிவு காண அச்சமாக இருந்தது.

ஹர்ஷன் அந்தக் கார் விபத்துக்குப் பின்னர் பிழைத்து எழுந்திருந்தால் போதுமென்று அவள் வேண்டாத தெய்வம் பாக்கியிருக்கவில்லை. காயங்கள் குணமாகி நன்றாக நடமாடத் தொடங்கி விட்டிருந்த சமயம் மறுபடியும் அவனுக்கு ஒரு விபத்து ஏற்பட்டது. இது அதிர்ச்சி தரும் பேரிடி.

அவனது அலுவலகத்திலே வேலை பார்த்த ஊர்மிளாவுக்கும் அவனுக்கும் இரண்டாண்டு காலமாக ஏற்பட்டிருந்த நட்பு காதலாகவே மலர்ந்திருந்தது.

கணவனுக்குப் பின்னர் மகனைக் கண்ணின் கருமணியாகக் காத்து வளர்த்துப் படிக்க வைத்து ஆளாக்கியிருந்தாள் கஸ்தூரி.

பெண் உரிமைப் போராட்டங்களில் முதல் கொடி பிடித்துக் கொண்டு நடக்கும் ஆவேசக்காரி. அவர்கள் வசித்த பகுதியில் இயங்கிய மாதர் சங்கத் தலைவி. வரதட்சிணைக் கொடுமை ஒழிய வேண்டும் என்று வாய் அலுக்காது பேசுகிறவள். மகனுடைய காதல் திருமணத்துக்கு ஒப்புதல் கொடுக்காது முட்டுக்கட்டை போட இயலுமா?

ஊர்மிளா — ஹர்ஷன் திருமணத்துக்கு ஒத்துக் கொண்டு விட்டிருந்தாள். ஆனால் மனப்பூர்வமாக இசைந்தாள் என்று சொல்லி விட முடியாது.

ஊர்மிளா அழகி, படித்தவள், வேலை பார்ப்பவள். வசதியான வீட்டுப் பெண் என்ற பல தகுதிகள் இருந்தன.

தங்களை விட உயர்ந்த இடத்திலிருந்து வரும் ஊர்மிளா தனக்கு உகந்த மருமகளாக இருப்பாளா என்றதொரு சந்தேகம் அவளுக்கு இருந்தது. ஊர்மிளா அவர்களது வீட்டுக்கு வந்து போன இரண்டு தடவைகளிலும் நடந்த சிறு சம்பவம் அதனை உறுதிப்படுத்தி விட்டது.

தன் வருங்கால மருமகளிடம் கஸ்தூரி பொறுப்புணர்ச்சியைத்தான் முக்கியமாக எதிர்பார்த்தாள்.

பெண்களுக்கு அது மிகவும் அவசியம் என்ற அழுத்தமான கொள்கை அவளுக்கு இருந்தது.

பொறுப்பே இல்லாது எதற்கும் சிரித்து மழுப்பும் இளம் பெண்ணை அவளுக்குக் கட்டோடு பிடிக்காது.

ஊர்மிளா முதல் தடவையாகத் தன்னைச் சந்திக்க வீட்டுக்கு வந்தபோது அவள் கவனித்து விட்டிருந்தாள். பொறுப்புணர்வுக்கும் அந்தப் பெண்ணுக்கும் காத தூரம் என்று கண்டுவிட்டாள். சிறிது நேரம் பேசியிருந்துவிட்டு, காப்பி டிபன் சாப்பிட்டதும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்ட ஊர்மிளா தன் கைப் பையை மேஜையின் மீது வைத்துவிட்டு மறந்து போய்விட்டாள்.

சிறிது பொழுதில் தொலைபேசியில் கஸ்தூரியைக் கூப்பிட்டாள். ''சாப்பாட்டு மேஜை மீது பையை வச்சுட்டு வந்துட்டேன் அம்மா. நகைக் கடையில் பழுது பார்க்கக் கொடுத்தனுப்பின பவள நெக்லசும், ஆபீஸ் அலமாரிச் சாவியும், காலையில் பாங்கிலிருந்து எடுத்த பணமும் அதில் இருக்கு... இப்படி மறந்து... ஹி...ஹி...'' வேடிக்கையாக மறுபுறத்திலிருந்து சிரித்தாள் ஊர்மிளா.

கஸ்தூரிக்குச் சிரிப்பு வரவில்லை. கோபந்தான் வந்தது. பையை எடுத்துக்கொண்டு ஊர்மிளாவிடம் ஒப்படைக்க உடனடியாக ஓடின மகனின் அவசரத்தை எண்ணி எரிச்சல் பட்டாள்.

இன்னொரு முறை வந்திருந்தபோது முகங் கழுவக் குளியலறைக்குச் சென்றவள், கைக்கடிகாரத்தை வாஷ்பேசின் அருகே கழற்றி வைத்து விட்டுப் போய்விட்டிருந்தாள். அதை அவளிடம் ஒப்படைக்க மறுபடியும் ஹர்ஷன் ஓடவேண்டியிருந்தது.

இந்தப் பெண் ஊர்மிளா தன் குடும்பத்துக்கு ஏற்ற மருமகளா? என்று உள்ளூற அவள் கவலைப் பட்டுக் கொண்டிருக்கையில் தான் அந்த அதிர்ச்சிச் செய்தி கிடைத்தது.

நிச்சயதார்த்த ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தபோது ஒரு நாள் காலை ஊர்மிளாவின் தந்தை — தமது அந்தஸ்தைக் கைவிட மனமின்றித் தம் வீட்டிலிருந்து கொண்டே ஹர்ஷனைத் தொலைபேசியில் கூப்பிட்டு விஷயத்தைச் சொல்லி விட்டார். வேண்டாத ஒரு சாமானைக் குப்பைத் தொட்டியில் வீசி எறிவது போல அசட்டையாகவே பேசிவிட்டார்.

'ஊர்மிளாவுக்கு இந்தக் கல்யாணத்தில் விருப்பமில்லையாம். அதனால் நிச்சயதார்த்தத்தை நிறுத்திவிட்டேன்.'

இந்த இடியை அவனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. மிகவும் நெருங்கிப் பழகிவிட்டு, காதல் என்று கதை அளந்துவிட்டுப் பலர் முன்னிலையில் அவனை அவமானப்படுத்திவிட்ட ஊர்மிளாவின் துரோகத்தைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

காய்ச்சல் அடித்தவன் போல — பித்தம் பிடித்தவன் போல — எதிலும் நாட்டமின்றி வேலையினின்று லீவு எடுத்துக் கொண்டு ஊர் ஊராக அவன் சுற்றிக் கொண்டிருந்தான்.

ஊர்மிளாவுக்கு வேறு இடத்தில் கல்யாணம் ஏற்பாடாகி விட்டது என்று தெரிந்ததும் அவன் யாரிடமும் பேசாது பல நாட்கள் மௌனமாக இருந்தான். அப்படிப்பட்டதோர் அதிர்ச்சி அந்தச் சம்பவம்.

ஊர்மிளா கல்யாணமாகிப் புக்ககம் போய் ஒரு குழந்தைக்குத் தாயான பின்பு கூட அவன் அந்தத் துயர அனுபவத்தினின்று பூரணமாக மீளவில்லை.

அதற்குப் பின்னர் அவன் கல்யாணம் என்ற பேச்சையே கேட்க வெறுத்தான். கஸ்தூரிக்கு வாயைத் திறக்கவும் பயமாகவே இருந்தது. வருடங்கள் இரண்டு முழுதாகக் கழிந்த பின்னர்தான் அந்தப் பழைய களையைச் சிறிது அவன் முகத்தில் காண முடிந்தது.





## துணுக்கு வேட்டை

இந்த இதழ் கல்கியில் இடம் பெற்றுள்ள துணுக்குகளைத் தேர்ந்தெடுத்துள்ளவர் திரு கோ. கலிவரதன் பி.ஏ. பி.எல்.
உதவி திருமதி சிவகாமி கலிவரதன்.
''உங்கள் தமிழ்ப்பேச்சைக் கேட்டுப் பொறுமையும் பெருமையும் அடைகிறேன்'' என்று மாணவர் கலிவரதனைக் கட்டித்தழுவிக் கொண்டு சொன்னவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராயிருந்த ஸர். சி. பி. திருச்சி மாவட்டம் கங்கைகொண்ட சோழபுரத்தில் பிறந்த திரு கலிவரதன், 'மிசா' வில் ஐந்து மாதக்காலம் சென்னை சிறையில் இருந்தபோது அந்த அனுபவங்களை வைத்து எழுதிய சிறு நூல் ''ஒன்பதாம் நெம்பர் பிளாக்''.
கல்லூரி நாட்களில், 1954 முதலே கவிதை, கட்டுரை, பேச்சுப் போட்டிகளில் தொடர்ந்து முதல் பரிசுகளை பெற்றவர். தமிழரசு கட்சியின் மாநில செயலாளராக இருந்து கொண்டு சட்டக் கல்லூரியில் படித்த போது நடத்திய வார இதழ் 'தமிழ்ச் சுடர்'. அதன் பின் ஜனதா கட்சியின், நாளிதழான 'மக்கள் அரசு'க்கு நிர்வாக ஆசிரியராகவும் இருந்தார்.
இந்த வழக்கறிஞர் இப்போது தமிழக பாரதிய ஜனதாக் கட்சியின் பொதுச் செயலாளர். இரவு இரண்டு மணி வரை பயனுள்ளவற்றைப் படிக்க வேண்டுமென்ற தாகமுடையவர்.

-வெள்பால்

போட்டோ:- பாபு

குடும்பத்து நண்பர் ஒருவர் மூலம் கிடைத்த வரன் அது. தயாநந்தின் குடும்பத்தைக் கஸ்தூரிக்கு மிகவும் பிடித்து விட்டிருந்தது. மகனுக்குப் பிடிக்க வேண்டுமே என்று தன் குலதெய்வத்தை வேண்டிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள்.

வேண்டாவெறுப்பாகத் தாயாரின் வற்புறுத்தலைத் தாங்க முடியாதுதான் ஹர்ஷன் பெண்ணைப் பார்க்க வந்தான்.

நல்ல வேளை அவனுக்கும் பெண்ணைப் பிடித்துவிட்டிருந்தது. கல்யாணத்துக்குச் சம்மதமும் தெரிவித்து விட்டான். அவ்வளவு தான். கஸ்தூரிக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. மதுரையிலிருந்து அண்ணனை வரவழைத்துச் சூட்டோடு சூடாக விரைவில் திருமணத்தை முடிக்க அவசரப்பட்டாள். பெரிய விபத்திலின்று மகன் உயிர் பிழைத்ததற்கும், ஊர்மிளாவின் துரோகத்தை மறந்து அம்மா பார்த்துக் கொடுத்த பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்ததற்கும் ஒட்டு மொத்தமாக நன்றி செலுத்தத்தான் திருத்தணியில் கல்யாணம் நடத்துவதாக வேண்டிக் கொண்டிருந்தாள்.

கல்யாணத்துக்குச் சில தினங்களுக்கு முன்னால் கடைத் தெருவில் வேண்டிய சாமான்களை வாங்கிக் கொண்டு கடற்கரை ஓரமாகத் தானே காரை ஓட்டிக் கொண்டு வந்தவன் திடுக்கிட்டுப் போனான். காந்தி சிலையருகே பெல்பாட்டம், குர்தாவில் அவனது வருங்கால மருமகள் ஜயந்தி கழுத்தில் முடி வழிந்து கொண்டிருந்த ஒடிசலான ஒரு வாலிபனுடன் நெருக்கமாக நின்று பேசிக் கொண்டிருந்தாள்.

வேறு யாராவது சொல்லியிருந்தால் நம்பியிருக்க மாட்டான். தன் கண்களாலேயே பார்த்துவிட்ட காட்சி.

ஊர்மிளாவின் கதைதான் அப்படி முடிந்தது என்றால் இந்தப் பெண் ஜயந்தி?

சிந்திக்க முடியாது குழம்பிப் போய் விட்டான்.

கல்யாணத்தை மிக அருகில் வைத்துக் கொண்டு இந்தக் கலவரமான செய்தியை அவன் யாரிடம் சொல்ல முடியும்? என்ன செய்வது? ஏற்கனவே ஒரு முறை ஏற்பட்ட அவமானத்தில் அடிபட்டு உணர்வுகள் சிதைந்து மனம்உடைந்துவிட்டவன்ஹர்ஷன். அவனிடம் இதைப் பற்றிப் பேசுவது சாத்தியப்படாத சங்கதி. அண்ணன் பழங்காலத்து மனிதர். பெண்கள் சிரித்தாலே போச்சு என்று அலறிவிடும் ஆசாமி. அவரிடம் போய் சொல்வதும்சரிப்படாதகாரியம். யாரிடமும் பேசிப் பயன் இல்லை. இப்போது நேரமும் இல்லை. முருகன் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு அவன் மேற்கொண்டு காரியங்களைத் துரிதமாகக் கவனித்தாக வேண்டும். அதுதான் முக்கியம்.

சாப்பிட உட்கார்ந்திருந்த சம்பந்தி வீட்டவர்களின் கூட்டத்திலே கல்யாணப் பெண்ணைக் கண்களால் துழாவினான். காணவில்லை.

சம்பந்தியம்மாள் சுமதியையும் பந்தியில் காணவில்லை.

சாப்பாடு நிறைந்த டிபன்செட்டைத் தூக்கிக் கொண்டு சமையற்கட்டிலிருந்து வெளிப்பட்ட மாதங்கி கஸ்தூரியைக் கண்டு நாணிப் புன்முறுவலித்தாள்.

''பெரியம்மாவுக்கு வர முடியலே – மூட்டு நோவு. அதனால் சாப்பாட்டை அறைக்கே எடுத்துட்டுப் போறேன்.''

''அதுக்கென்ன பேஷாய்ச் செய். ஒண்ணேயும் மறக்காம கேட்டு எடுத்துக்கிட்டுப் போ. ஆமாம், கல்யாணப் பெண் இன்னும் சாப்பிட வரலேயே. உடனே பரிசத்துக்கு உட்காரணுமே. தெரியுமில்லையா?'' யாருக்கும் கேட்காத குரலில் வினவினாள் கஸ்தூரி.

''தலையலங்காரம் செய்ய நேரம் பிடிக்கும். அதனாலே அக்காவும் அங்கேயே சாப்பிட்டுக் கிறதாச் சொல்லித்து.''

நெற்றியில் கொப்பளித்த வியர்வைத் துளிகளை மெல்லக் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டாள் கஸ்தூரி. மாதங்கிக்குத் தலையசைத்து விடை கொடுத்துவிட்டு மண்டபத்துக்குள் புகுந்தாள். அடிவயிற்றைப் பிசைந்த அந்தத் திகில் உணர்வு சிறிது அடங்கிப் போனது. அப்பாடா என்று பெருமூச்சு வந்தது. அண்ணன் கொடுத்த குரலுக்கு உதவ அறைக்குள்ளே விரைந்தாள்.

கல்யாணக் கூடத்திலே ஜமுக்காளத்தையும் பாய்களையும் பரபரப்பாக ஆட்கள் விரித்தனர். தேங்காய் — பழங்கள் — மிட்டாய் என்று தட்டுக்களைச் சுமந்து கொண்டு சுமங்கலிப் பெண்கள் பாயின் மீது வரிசை வைத்தார்கள்.

''பெண்ணைக் கூட்டிவர ஆளை அனுப்பு. மசமசன்னு நின்னுக்கிட்டிருந்தால்?...'' அடிக் குரலில் அண்ணன் தங்கையை அதட்டினார்.

''ஆள் அனுப்பியாச்சு. அவங்கள்ளாம் வரவேண்டியதுதான் பாக்கி. எந்த நிமிஷமும் வரலாம்....'' என்று சொல்லிவிட்டுத் திரும்பினாள் கஸ்தூரி.

அங்கவஸ்திரத்தைக் கையில் பிடித்துக் கொண்டு தலை தெறிக்கும் வேகத்தில் சம்பந்தி தயானந்த் ஓடிவருவதைக் கவனித்தாள்.

பகீர் என்ற உணர்வு நெஞ்சைக் கவ்வியது. 'இப்போ என்ன ஆச்சு? ஏன் இவர் இப்படி ஓடி வருகிறார்?'

''உங்களைத்தானே...இப்படி வாரீங்களா?'' மிக மெல்லிய குரலில் ரகசியமாக அழைத்த தயானந்தின் பின்னால் சாமான்கள் வைத்திருந்த அறைக்குள்ளே சென்றாள். உடம்பு முழுவதிலும் வியர்வை ஆறாக வழிவதை உணர்ந்தாள். நெஞ்சு படபடக்க மூச்சு திணற ஆவலுடன் அவர் முகத்தைப் பார்த்தாள்.

''இந்தக் கடிதாசியை எழுதி வச்சுட்டு என் பெண் சென்னைக்குப் போய்விட்டாள்! நான் என்னம்மா செய்வேன்... நடக்கக் கூடாதது நடந்துடுச்சு....'' அவரது குரல் நடுங்கியது. சட்டைப் பையிலிருந்து ஒரு கடிதத் துண்டை எடுத்து அவளிடம் நீட்டினார் தயானந்த்.



மஹாராஷ்டிர மாநில சுற்றுலா இலாகா அங்குள்ள மலை வாசஸ்தலங்களுக்கு ஹனிமூன் வரும் புது ஜோடிகளுக்காக மரங்களின் மேல் குடிசைகள் கட்டிக் கொடுக்கத் திட்டம் போடுகிறது!
- டைம்ஸ் ஆப் இந்தியா
- அர்ஜுனன்

அன்புள்ள அப்பா!

எனக்கு இந்தக் கல்யாணத்தில் சிறிதும் விருப்பமில்லை. உங்களுக்கு ஜாடையாகப் பல தடவைகள் சொல்லியும் புரிந்துகொள்ளாது என்னை வற்புறுத்தினீர்கள். காரியம் மிஞ்சுவதற்கு முன் தப்பிக்கொள்வதுதான் சிறந்தது என்ற முடிவில் நான் விரும்பியவரின் உதவியுடன் சென்னைக்குத் திரும்பிவிட்டேன். என்னை அங்கே ஓடிவந்து தேடுவதில் பயனில்லை. பம்பாய்க்கு நாங்கள் பயணப்பட்டுக் கொண்டிருப்போம். மன்னிக்கவும். —ஜயந்தி.

கஸ்தூரி கீழே விழுந்துவிடா வண்ணம் சுவரை ஆதாரமாகப் பிடித்துக்கொண்டாள். உயிரெல்லாம் போய் உடல் சக்கையாகிவிட்ட பிரமிப்பு.

இனி என்ன செய்யப் போகிறோம்? நண்பர்கள், உறவினர்கள் முன்னால் அவனுக்கு இப்படி ஓர் அவமானமா?

இந்த இரண்டாவது இடியை ஹர்ஷன் எப்படித் தாங்கிக் கொள்ளப் போகிறான்?... முருகா.! இப்படி ஒரு சோதனை எனக்கேன்? மௌனமாக அவள் மனம் அலறி அழுதது.

(தொடரும்)



# வசந்த காலம்

1) கணவனைக் கையில் போட்டுக் கொண்டு மாமனார் மாமியாரைக் கஷ்டப்படுத்தினால் நம்ப பையனும் நம்மை அதேபோல் கஷ்டப்படுத்துவான்.

2) பெற்ற அப்பா அம்மா மனம் நோகும்படி ஒருவன் செய்தால் அவன் சந்தோஷமாக வாழ முடியாது.

இந்த அரிய நீதிகளைத் தவிர படத்தில் ஒன்றும் இல்லை. இடைவேளை வரை மருமகள் கொடுமை. இடைவேளைக்குப் பின் மருமகள் மாமியாராக மாறி அவளுக்கே கொடுமை. பழிக்குப் பழி வாங்குவதை ரசிப்பவர்களைத் தவிர மற்றவர்களுக்குத் தியேட்டரில் உட்கார்ந்திருப்பதே பெரிய கொடுமை.

சுருளிக்குக் கொஞ்சம் பெரிய ரோல். சுமித்ரா ஜோடி. கஷ்டப்படாத விஜயன். வனிதாவும், அருண் குமாரும் பரஸ்பரம் ஊமைகள் என்று நினைத்துப் பரிதாபப்பட்டுக் கொள்ளும் இடம் சுமார்.

டைரக்டர் காஜாவிடம் ஆக்கப் பூர்வமாய் எதிர்பார்க்கலாம் என்ற நம்பிக்கை சிறிது சிறிதாய்ச் செத்து வருகிறது.

—நளினி சாஸ்திரி



# நகங்களில் பிரச்சினையா?



## மிருதுவான/உடைகின்ற/பிளவுபடும்/உரிந்துவிடும் மற்றும் வளர்ச்சியின்றி கட்டையான நகங்களா?

இப்போது நூதனமான பாக்கில் கிடைக்கிறது. கூடுதல் விலை ஏதுமின்றி!



உங்களுக்கு தேவை

# கால்ஷியம்-சாண்டோஸ்®

வில்லைகள். கால்ஷியம் சாண்டோஸ் உபயோகித்து ஏற்படும் மாறுதலைப் பாருங்கள்.

நாளுக்கு நான்கு வெனில்லா சுவையூட்டப் பெற்ற கால்ஷியம் சாண்டோஸ் வில்லைகளே போதும். பதினைந்து நாட்களில் உங்கள் நகங்கள் வலுவடைந்து நல்லழகு கூடிப் பொலியும். விஞ்ஞான பரிசோதனைகள் இதனை நிரூபித்துள்ளன. உட்கொள்வீர் கால்ஷியம் சாண்டோஸ்-உலகிலேயே மிகச்சிறந்த கால்ஷியம். ஸ்விட்சர்லாந்து நாட்டில் சாண்டோஸால் உருவாக்கப்பட்டது.



கால்ஷியம் சாண்டோஸ் வில்லைகளைக் கேட்டு வாங்குங்கள். மாற்று எதனையும் ஏற்காதீர்கள்.

நகங்களில் தொல்லை மீண்டும் தோன்றினால் மீண்டும் ஒரு தவணை உட்கொள்ளுங்கள்.




daCunha-S-22 TM

பத்தாம் நூற்றாண்டில் ஒரு நாள்.

காஷ்மீரப் பிரதேசம்.

ஜீலம் நதியிலிருந்து பிரிந்து வந்த அந்த வாய்க்கால், குறுகலாக இருந்தாலும், சற்று ஆழமாக இருந்ததால் பொங்கி ஓடிவரும் வெள்ள நீர் சுழித்து நுரைத்துக் கொண்டு சென்று கொண்டிருந்தது.

அந்த நதி நீரில் கரிய பெரிய பெண் எருமைகள் ஆறு, ஒன்றன் பின் ஒன்றாக இறங்கி ஆற்றின் குறுக்காக அக்கரையையும் இக்கரையையும் தொட்டுக் கொண்டு ஒரு எருமைப் பாலத்தை அமைக்க, அவற்றின் விரிந்த முதுகுகளின் மீது கால் வைத்து நடந்து ஒவ்வொன்றாக நதியைக்கடக்கின்றன. அவற்றின் இளம் கன்றுகள்!

அந்த எருமைக் கன்றுகள் மிக நிதானமாக — சீராக —சரியாக — அடியெடுத்து வைத்ததைப் பார்த்தால், அவை திறம்படப் பழக்கப்படுத்தப்பட்டிருப்பதும், இப்படிக் கடப்பதில் அவை நன்கு அனுபவம் பெற்றிருப்பதும், தெள்ளெனப் புரிந்தது. அப்படி அதனைப் பழக்கியவன் யார்...?

அவன்தான் துங்கன் — எருமை மேய்ப்பவன்!

''அற்புதம்...'' என்ற ஒற்றைச் சொல்லும், அதைத் தொடர்ந்து கைதட்டலும், அவனைத்திரும்பிப் பார்க்கச் செய்தன. அந்தத் திசையில்—

ஒரு யானை. அதில் இளம் பெண்!

முக்கால் பாகம் கனி நிலைக்கு மாறிவிட்டிருக்கும் தக்காளியின் மேல் தைலம் பூசி, சூரிய ஒளியில் வைத்தது போன்றதொரு சிறப்பான செப்பு நிறத்தில் மினுமினுத்துப் பளபளத்துக் கொண்டிருந்தாள் அவள்.

அவள்—

டிட்டா தேவி.

அரசன் க்ஷேமகுப்தனின் அபிமான மனைவி —ஆசை நாயகி!

''என்ன ஆச்சரியம்! இந்த எருமைகளும் கன்றுகளும் இவ்வளவு சாதுரியமாக ஆற்றைக் கடந்து விட்டனவே! சாதாரணமாக விலங்குகளிலேயே எருமைகள்தான் மந்த புத்தியுள்ளவை என்பார்கள்.''

''எருமைகள் மந்த புத்தியுள்ளவைதான். ஆனால் அவற்றை மேய்ப்பவனுடைய சொந்த புத்தி செழிப்பாக இருக்கலாமல்லவா?''

'ஓ...இந்த மாடு மேய்ப்பவன் மிகுந்த சாமர்த்தியசாலிதான்! மந்த புத்திகொண்ட எருமைகளையே இந்த அளவுக்கு...! இவனது புத்தி கூர்மையை நாம் பயன்படுத்திக் கொண்டால் என்ன...?'

டிட்டா தேவிக்கு ஒரு பிரச்னை இருந்தது. கண நேரத்துக்குள் தீவிரமாகச் சிந்தித்து; விரைவாக ஒரு முடிவுக்கு வந்தாள். தன் வலது கை விரலிலிருந்த முத்திரை மோதிரத்தைக் கழற்றித் துங்கனிடம் கொடுத்தவாறே சொன்னாள்—

''துங்கா... இந்த முத்திரை மோதிரத்தை எடுத்துக் கொண்டு ஜீலம் நதிக் கரையில் இருக்கும் உல்லாச மாளிகைக்குப் போ. அந்த மாளிகை என் ஆளுகைக்கு உட்பட்டது. எனது ஏகபோக உபயோகத்துக்கானது. அங்கு நீ செல்வதற்குள் எனது ஆக்ஞை அங்கு சென்றுவிடும். நீ அந்த மாளிகையின் தலைமைக் காவலன் என்ற போர்வையில் அங்கே தங்கலாம் — மாளிகை உரிமையாளனாகவே நடந்து கொள்ளலாம்.''

துங்கன் வியந்தான்.

அரசனின் அபிமான மனைவி என்ற முறையில் அவளிடம் மக்களுக்குப் பயம் இருந்ததே தவிர, அரசி என்ற பக்தி இருக்கவில்லை. அவள் மேல் தீராத மையல் கொண்டு மனைவியாக்கிக் கொண்ட மன்னன் க்ஷேமகுப்தனும் டிட்டாவின் ஆசையை நிறைவேற்ற முன்வரவில்லை. டிட்டா அரச பரம்



பரையைச் சேராதவள், அவளை ராணியாக ஏற்க மக்கள் விரும்ப மாட்டார்கள், எதிர்ப்பு வரும் என்று மன்னன் அறிந்திருந்தான்.

இதையெல்லாம் எண்ணி டிட்டா தேவி ஆத்திரம் அடைந்திருந்தாள்.

எருமை மேய்க்கும் பழைய துங்கனு இவன்!

ஆடை அணிமணி ஆபரணங்கள் பூண்டு அலங்கார மஞ்சத்தில் சாய்ந்து கிடந்த அவனையும் அவனது தோரணையையும் பார்த்த பொழுது பரம்பரை அரச குமாரன் கெட்டான் எனத் தோன்றிற்று டிட்டா தேவிக்கு.

"அரசர் நிலை இன்றோ, நாளையோ என்று இருக்கிறது. அவருக்கு இரு குமாரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இருக்கக் கூடாது. அரசன் இருக்கும்போதே நான் வெறும் அலங்கார மனைவிதான். அவர் குமாரர்கள் பதவிக்கு வந்துவிட்டால் நான் அனாதையாக் கப்படுவேன். பழைய நிலைக்கு நான் திரும்ப வேண்டி இருக்கும். அதை நான் விரும்ப வில்லை."

"பழைய நிலை என்ன?"

"பூக்காரி."

"நான் உங்களை ராணியாக்குகிறேன்."

அவன் வார்த்தைகளில் வெளிப்பட்ட நம்பிக்கை டிட்டாவைச் சிலிர்க்க வைத்தது.

அடுத்து துங்கன் விவரித்த திட்டத்தைக் கேட்ட டிட்டா பல கணங்களுக்கு மலைத்துப்போய் நின்றாள். பின் சொன்னாள்—

"ஓ... துங்கா! உண்மையிலேயே நீ அதி புத்திசாலிதான்; சந்தேகமே இல்லை. இனி, வருங்காலத்தில் நான்தான் ராணி, நீ என் மந்திரி."

'வருங்காலத்தில் உன் மந்திரி மட்டுமல்ல, உன் மணாளனும் நான்தான்' என்று உள்ளுக்குள் நினைத்துக் கொண்டான் துங்கன்.

மூன்று பௌர்ணமிகள் வந்து போய் விட்டன. அரசன் க்ஷேமகுப்தனின் சயன அறையில் டிட்டா தேவியும் மற்ற ராணிமார்களும் கூடியிருந்தார்கள்.

டிட்டா சொன்னாள்—

"மன்னா, பெரும் சோகத்துக்கிடையே தான் நான் இந்த வார்த்தைகளைக் கூறுகிறேன். நெருப்பு என்றால் வாய் வெந்து விடாது. நீங்கள் நீடூழி காலம் வாழ வேண்டுமென்பதுதான் என் ஆசை. என்றாலும், நீங்கள் உயிரோடு இருக்கும்போதே உங்கள் கண்ணெதிரிலேயே உங்கள் மூத்த குமாரன் உச்சலாவுக்கு அரச பட்டம் கட்டிவிடுவது உத்தமம் என்று இந்த எளியவளுக்குத் தோன்றுகிறது. இளையவன் சல்லலாவுக்கு இளவரசப் பட்டம் கட்டிவிடலாம்."

இந்த வேண்டுகோளை டிட்டா சொல்லக் கேட்டபோது அங்கு கூடியிருந்த ராணியரும், அரச குமாரர்களும், ஏனைய முக்கிய அரசதிகாரிகளும் வியந்தே போனார்கள். டிட்டாவின் வாயிலிருந்து இப்படிப்பட்ட வேண்டுகோள் வருமென்று அவர்கள் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை.

அடுத்த சில தினங்களில் ஸ்ரீநகர் முழுவதும் ஒரே பேச்சு. மக்கள் ஆச்சரிய வெள்ளத்தில் அமிழ்ந்து போய்ப் பேசிக் கொண்டனர்.

"என்ன இது! ஒரு சின்ன அரண்மனையே டால் ஏரியில் மிதந்து கொண்டிருக்கிறதே!"

க்ஷேமகுப்தனின் சேனாதிபதி அங்கு சென்று பார்த்தான். அந்த மிதக்கும் அரண்மனையின் வனப்பு, அவனையும் வசீகரித்தது. கம்பீரமாக விசாரித்தான்.

அதன் விளைவு: சேனாதிபதியுடன் யோகியும் துறவியுமான ரூபன் அரண்மனையில் அரசன் க்ஷேமகுப்தனை அணுகும் வாய்ப்புக் கிட்டுகிறது. மிகவும் வற்புறுத்தி, ஆசையும் பற்றுமாக வேண்டுகோள் விடுகிறார் ரூபன். ஆனால் அரசன் தயங்குகிறான்.

"பெரியவரே, மிகவும் சீர்கெட்டிருக்கும் என் உடல்நிலை அத்தகைய ஜலவாசத்தைத் தாங்கும் நிலையில் இல்லையே!"

அப்போது உச்சலா சொன்னான்:

"தந்தையே, எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நானும் இளவல் சல்லலாவும் தங்கள் சார்பாக அப்படகு வீட்டில் தங்கி, இந்த யோகியாரின் மனக் குறையைத் தீர்த்து வைக்க நினைக்கிறோம்."

ரூபன் உடனே மொழிந்தார்: "ஆஹா... என்ன அற்புதமான யோசனை!"

மூத்தராணியைப் பார்த்துக் கேட்டான் அரசன். "ராணி! நீ என்ன சொல்கிறாய்?"

"குழந்தை ஆசைப்படுகிறானே, அதனால் சரியென்று..."

அரசனுக்கு இந்தப் பதில் திருப்தி அளிக்கவில்லை.

"டிட்டா... நீ என்ன சொல்கிறாய்?"

"அரசே, இன்னும் ஒரு திங்களில் அரசனாகிவிட்டால் உச்சலாவுக்குப் பொறுப்புகள் அதிகரித்து அவனை அழுத்தத் தொடங்கி விடும். அப்போது அவன் விரும்பினாலும் இத்தகைய வாய்ப்புக்களை அனுபவிக்க முடியாது. எனவே அதற்கு முன் சந்தோஷமாக, உல்லாசமாக, உற்சாகமாக இருக்கக் கிடைக்கும் வாய்ப்பை அவனுக்குத் தரலாம்!"

இந்தச் சாதுரியமான பதில் அரசனுக்குத் திருப்தி தந்தது.

'இவள் நன்கு சிந்தித்துச் செயல்படுகிறாள்'.

அன்று ஸ்நான அறையில் துங்கன் இட்டிய திட்டத்தை — அவனும் தானும் பேசிக் கொண்ட பேச்சுக்களை — மீண்டும் நினைவுக்குக் கொண்டு வந்தாள் டிட்டா.

நண்பர்: "உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?"

பொடிக் கடைக்காரர்: "மூணு பொடி மக்கள்!"

"நண்பர்: என்ன பேர் வைச்சிருக்கீங்க?"



பொடிக் கடைக்காரர்: "காரம், மணம், குணம்!"

முத்து. தங்க. இளம்பண

அவர்: வரவர உனக்கு ஞாபகமறதி அதிகமாயிடுச்சு! வீட்டைப் பெருக்கச் சொல்லி எவ்வளவு நேரமாச்சு! இனிமேல் இந்த வீட்டில் உனக்கு வேலை இல்லே போ வெளியே!

இவள்: ஞாபக மறதி உங்களுக்குத்தான்! நான் நீங்க நினைக்கிற மாதிரி வேலைக்காரி இல்லே உங்க மனைவி!

- கடலூர் கன்னியப்பன்



"படகு வீடா? யாரும் கேள்விப்படாததாக இருக்கிறதே?''

''இதோ இப்படித்தான். ராணி, கவனமாகப் பாருங்கள்.''

துங்கன் பாத்திரத்து நீரைச் சிறிது சிறிதாகப் பளிங்குத் தொட்டியில் மிதக்கும் மற்றொரு வாயகன்ற பாத்திரத்தில் ஊற்ற அது ஆடாமல், அசங்காமல், அலுங்காமல் குலுங்காமல் இம்மி இம்மியாக நீருக்குள் இறங்கியது. பாத்திரத்தின் மேல் புறத்திலிருந்து நோக்கும்போது அது மூழ்குவதைக் கிஞ்சித்தும் உணர முடியவேயில்லை. பாத்திரத்தில் நீர் கொஞ்சம் கொஞ்சமாகச் சேரத் திடீரென்று ஒரு துளி நீரின் அதிகரிப்பில் கனம் மிகுந்து போய், பொசுக்கென்று பாத்திரம் நீரில் முழுமையாக மூழ்கி அடித்தளத்தை சென்றடைந்தது.

துங்கன் சொன்னான்—

''இந்தப் பாத்திரம்தான் படகு வீடு. படகின் அடிப்புறத்தில் ஒரு ரகசிய அறை இருக்கும். அதில் இப்படி நீர் நிரம்பும்.''

டிட்டாவும் புத்திசாலி அல்லவா? உடனே புரிந்து கொண்டாள்.

டால் ஏரி. அந்த ஏரியிலே ஒரு குட்டி அரண்மனைபோல் பொலிந்துகொண்டிருக்கும் படகு வீடு. உள்ளே இரவுக் கேளிக்கைகள் ஏக கோலாகலமாக நடைபெற்றுக்கொண்டிருந்தன. உச்சலாவும், சஸ்லாவும் இந்தப் பதினைந்து நாட்களும் மது பானத்திலும் மங்கையரின் அதர பானத்திலும் அமிழ்ந்து முக்குளித்துக் கொண்டிருந்தார்கள்.

அன்று மூத்த ராணியும், மந்திரியும், சேனாதிபதியும் டிட்டாவும் டால் ஏரிக் கரைக்கு வந்தனர். உச்சலாவையும் சஸ்லாவையும் காண விரும்பித் தகவல் அனுப்பினர்.

மந்திரி சொன்னார் — ''உச்சல ராஜகுமாரரே! இரு தினங்களில் பௌர்ணமி வருகிறது. அன்று தங்கள் மகுடாபிஷேகமல்லவா, அரசர் க்ஷேமகுப்தர் இன்றே, தங்களையும், இளவரசரையும் அரண்மனைக்கு அழைத்து வந்துவிடச் சொன்னார்.''

''அதற்குள்ளாகவா... நாளை மறு தினம் வந்தால் போதாதா?''

டிட்டா குறுக்கிட்டுச் சொன்னாள்—

''இல்லை உச்சலா, நீ இன்றே, அதுவும் உடனேயே எங்களுடன் கிளம்பியாக வேண்டும். விரைவில் அரசனாகவிருக்கும் உன்னைப் பொறுப்பற்று இங்கு விட்டுச் செல்ல முடியாது. என்ன இருந்தாலும் படகு வீடு அரண்மனையைப் போல் பாதுகாப்பான ஒன்றல்லவே?''

சஸ்லா வெடித்தான். ''ஏன், அதில் என்ன பாதுகாப்புக்குக் குறைவு? இந்தப் பதினைந்து நாட்களில் என்ன ஆபத்து வந்துவிட்டது இனிமேல் பயப்பட? ரூபன் எங்களைத் தமது கண்களில் வைத்துத் தாங்கிக் கொண்டிருக்கிறார். அப்படியிருக்க..., ஹூம், சில பேருக்கு அடுத்தவர் ஆனந்தமாக இருந்தால் பிடிப்பதில்லை....''

ராணிக்கு உடனே தன் அந்தஸ்தில் தனி அகந்தை வந்தது. டிட்டாவின் கட்டளையை எடுத்தெறிவதே, அந்த அந்தஸ்தை நிலைநாட்டும் சிறந்த வழி என்று தோன்றியது. உடனே சொன்னாள் — ''ஆகட்டும் குழந்தைகளே... உங்கள் மனம் போல இன்னும் இரு தினங்கள் இருந்து விட்டு..?.''

உச்சலாவும், சஸ்லாவும் டிட்டாவை ஒரு ஏளனப் பார்வை பார்த்தவாறே படகு வீட்டுக்குத் திரும்பிச் செல்ல, ஏனையோர் அரண்மனைக்குச் சென்றனர்.

அன்றிரவு.

வரைமுறையற்ற தங்கள் ஆனந்த வாழ்வுக்கு ஓரிரு தினங்களில் ஒரு முடிவு வந்துவிடப் போகிறதே என்ற ஆதங்கத்தில் அளவிடற்கரிய வெறியோடு, இன்பம் துய்த்துவிட்டு, இளவரசர்கள் ஓய்ந்து உறங்கிக்கொண்டிருந்தனர். படகு வீடு முழுவதிலுமே ஒரு மயான அமைதி நிலவிக் கொண்டிருந்தது.

ரூபன் சர்வ ஜாக்கிரதையாக வெளிக் கிளம்பி டால் ஏரியில் குதித்தான். நீரின் மட்டத்துக்குச் சற்றே அடியில் சென்றான். படகின் பக்க வாட்டில் துழாவித் துழாவி ஒரு ரகசிய இடத்தைத் தேடினான். அங்கே ஒரு மிகச் சிறிய சதுர மரப் பலகை கையில் தட்டுப்பட, அதனைக் கதவு போல் அவன் திறக்க, அதனுள் டால் ஏரியின் நீர்குபு குபுவென்று உள்ளே புக ஆரம்பித்தது. அந்த நீர் படகின் கீழ்த் தளத்தில் அமைந்திருந்த ரகசிய அறையினுள் சிறிது சிறிதாக நிரம்பலாயிற்று. நீரின் கனம் அதிகரிக்க, அதிகரிக்க, கண்ணுக்குப் புலப்படாத வகையில் மிக மிக மெதுவாக, படகு நீருக்குள் அமிழ்ந்து கொண்டிருந்தது. ஒரு அசைவு இல்லை, ஒரு குலுக்கல் இல்லை; ஒரு ஆட்டம் இல்லை. மிக மிக மெதுவாக... பூப்போல... கொஞ்சம் கொஞ்சமாக.... அறை முழுவதும் நீர் நிரம்பி அறையின் நீர் மட்டமும் ஏரி நீர் மட்டமும் ஒன்றாகி சம நிலைக்கு வந்தபோது — குபுக்கென்று படகு ஒரே வீச்சில் கண்ணிமைத்துத் திறப்பதற்குள் முற்றுமாக நீரில் அமிழ்ந்து ஏரியின் அடி ஆழத்துக்கே போய்விட்டது. இது என்ன? மயக்கத்திலிருக்கும் இளவரசர்கள் உணர்வு பெறுவதற்குள்ளேயே மூச்சு

முட்டிச் சாவார்கள். இது சர்வ நிச்சயம்.

ரூபன் தனது காவி உடையைக் களைந்து நீரில் எறிந்தான். அங்கிருந்து நெடுந் தொலைவு நீந்திச் சென்று துங்கனுகக் கரை ஏறினன்.

**அவர்கள் நினைத்தது முடிந்துவிட்டது.**

ஏரிக்கரையிலே ஒரே கூச்சல், குழப்பம், களேபரம். மக்கள் கூட்டம், மந்தை மந்தையாகக் கூடி நின்றது. ராணியும், டிட்டாவும், மந்திரியும் சேனுதிபதியும் சூழ்ந்து நிற்க, தரையில் இரு சடலங்கள் கிடத்தப் பட்டிருந்தன — அவை உச்சலா சஸ்ஸலா வின் சடலங்கள்!

டிட்டா கதறினள்.

''ஐயோ ஆண்டவனே, நீ எப்பொழுதி லிருந்து இவ்வளவு கொடுமைக்காரனுக மாறினுய்? என் பிரார்த்தனைக்காவது செவி சாய்த்திருக்கக் கூடாதா? இளங் குருத்துக் களை — எங்கள் வருங்கால அரசனை இப்படி ஈவிரக்கமின்றி அழைத்துச் சென்றுவிட் டாயே'' அந்தச் சடலங்களின் மேல் திடீ ரென்று விழுந்து புரண்டு அழுதாள் டிட்டா.

ராணி முதலாக மக்கள் கூட்டமே இதைக் கண்டு பிரமித்து நின்றது.

அதே சமயம் —

கூட்டத்தில் ஒரு குரல்—

''ஆஹா... தாய்ப் பாசம் என்முல் இது வல்லவோ தாய்ப் பாசம்! பெற்ற தாய்க்கும் மேலாக, இந்த டிட்டா தேவியாருக்குத் தான் அரச குமாரர்களிடம் எவ்வளவு பிரியம்? அரச குடும்பத்தின் மேல் இவ் வளவு அக்கறை கொண்டு அவர்களை உயிர் மூச்சாக நினைக்கிற — இவரல்லவோ நமக்கு ராணியாக இருக்கத் தகுந்தவர்? நேற்று இவரது அறிவுரையை மட்டும் மதித்துக் கேட்டிருந்தால், இந்த அவலம் நேர்ந் திருக்காதே, ஆஹா.. என் மெய் சிலிர்க் கிறது. ராணி டிட்டா தேவி வாழ்க.''

''வாழ்க...'' தம்மையும் அறியாமல் மக்கள் கூட்டம் மந்தையாக மாறித் துங்கனின் உணர்ச்சி வசப்பட்ட பேச்சில் ஈடுபட்டு, டிட்டா தேவிக்கு ராணிப் பட்டம் கொடுக்கும் முகமாக வாழ்த்தியது.

குரல் வந்த திசையில், ஓரக் கண்களை ஓட்டிப் பார்த்துக் கொண்டாள் டிட்டா. அங்கே நின்றது துங்கனேதான்.

கல்கத்தாவில் சைனுக்காரர் வாழும் பகுதியிலிருந்து சீன மொழியில் இரண்டு செய் திப் பத்திரிகைகள் வெளியாகின்றன. அதில் ஒரு பத்திரிகை துவங்கப்பட்டு முப்பது வருஷங் களுக்கு மேல் ஆகிறது!

'பிரோப்' - அனிதா ராமச்சந்திரன்



அதே சமயம், அரண்மனையிலிருந்து ஒரு சேவகன் விரைந்தோடி வந்து அதிர்ச்சி தரும் அந்தச் செதியைப் புலம்பல் குரலில் சொன்னுன்.

''அரசர் க்ஷேமகுப்தர் மாண்டு விட்டார். அரச குமாரர்களின் எதிர்பாராத மரணச் செய்தியே அவருக்கு எமனுகி விட்டது.''

டிட்டா ஆவேசமாக ஆணையிட்டாள்.—

''சேனுதிபதி, இத்தனை அவலங்களுக்கும் மூலகாரணமான அந்த ரூபனைப் பிடித்து வாருங்கள். சிறையில் தள்ளிச் சித்திரவதை செய்யுங்கள்!''

''இதோ... இதோ... ராணி, உடனே அவரைப் பிடித்து வருகிறேன்.''

சேனுதிபதி, அரச கட்டளையாக அதை ஏற்றுக் கொண்டு தம்மையும் மீறிப் பறக்க—

''அரசரும் இறந்து விட்டாரே, தலைமை யில்லாத அரசாகி விட்டதே நமது காஷ் மீரம்'' என மந்திரி புலம்ப —

''டிட்டா தேவியை மிஞ்சியும் ஒரு தலை மையா? ராணி டிட்டா தேவியே இந்த இக் கட்டான நேரத்தில் தலைமை பீடத்தை அலங்கரிக்கத் தக்கவர்....'' — துங்கனின் குரல் சமயோசிதமாக முழங்க—

மக்கள் கூட்டத்தில் இந்த எண்ணம் பிரதிபலிப்பாகி, ''ஆம்.... ஆம்... டிட்டா தேவிதான் இனி எங்கள் ராணி. ராணி டிட்டா தேவி வாழ்க'' எனப் பெரும் உற் சாகத்துடன் முழக்கம் செய்தனர்.

சேனுதிபதி வந்தபோது, காவி அங்கி மட்டுமே கிடைத்த விவரம் சொன்னுர்.

''ஓ...அந்த ரூபன் நல்லவன்தான்போலும். கடைசிவரை போராடியிருக்க வேண்டும். அவர் சடலம் கூடக் கிடைக்காதது நமது துர்ப்பாக்கியம்தான் ராணி.''

''நடந்தது நடந்து விட்டது. இனி நடக்க வேண்டியதைக் கவனிப்பதே உத்தமம்''— துங்கனின் குரல் கூட்டத்திலிருந்து ஒலித்தது.

ராணி டிட்டாதேவியாக அரண்மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டாள் அவள்.

அதன் பிறகு காரியங்கள் யாவும் வெகு துரிதமாக, யாவரும் ஸ்தம்பித்துப்போகும் அளவுக்கு முற்றிலும் எதிர்பாராத விதமாக நடந்தேறின.

பெரியவர்கள், மதிப்புக்குரியவர்கள், என் றெல்லாம் சற்றும் தயங்காது, தன்னை எதிர்த்த அத்தனை பேரையும் மூத்த ராணி மற்றும் அவர்களது உறவினர்கள் உட்பட பூண்டோடு அழித்து நிர்மூலமாக்கினுள் டிட்டா தேவி.

துங்கனைத் தனது மந்திரியாக ஆக்கிக் கொண்டாள். அவனது துணையோடு, அறிவுக் கூர்மை அனைத்தையும் ஒரு சர்வாதி காரத் தன்மையோடு பிரயோகித்து, காஷ் மீர தேசத்தை சுபிட்சமாக்கி, தனது ஆட்சிக் காலத்தில் மிக்க உன்னதமான நிலைக்குக் கொண்டு வந்தாள் டிட்டா.

அரியணையில் கம்பீரமாக அமர்ந்து கொண்டிருந்த ராணி டிட்டா தேவி நினைத் துக் கொண்டாள்—

''சரித்திரம் திரும்பத் திரும்ப நிகழும். இதே சரித்திரம் இன்னும் சில காலம் கழித்தும் நிகழலாம்.''

⌘ பி. புவனு, மதுரை-2

கே. நல்ல இலக்கியப் பத்திரிகைகள் - பிரக்ஞை, அது இது என்கிறீர்களே அவை எங்கிருந்து யார் வெளியிடுகிறார்கள் என்று தொகுத்து வெளியிடுங்களேன்.

ப: தொகுத்து வெளியிடுவதற்குள் அவைகளில் சில மடிந்து போயிருக்குமே! இலக்கியம் என்பது என்ன என்பது தெளிவாகாத விஷயமாக இருக்கும்போது இலக்கியப் பத்திரிகை என்று அட்டையில் அச்சடித்துக் கொண்டால் அது இலக்கிய இதழாகிவிடுமா?

⌘ ஹேமா ஜெகந்நாதன்
மைசூர்-4




கே. வறுமையின் நிறம் சிவப்பு படத்தில் உங்கள் பெயர் வரும்படி அப்படி என்ன நீங்கள் செய்தீர்கள்?

ப: பாரதியார் பாடல்களை அந்தப் படத்தில் புகுத்தியுள்ள பாலசந்தரும் தயாரிப்பாளர் 'பிரேமாலயா' வெங்கட்ராமனும் உண்மையில் இருவன்ளுவரின் சீடர்கள். நான் செய்த தினை அளவு உதவியைப் பனை அளவாகக் கருதிவிட்டிருக்கிறார்கள். 'கடுகை'ப் பூசணிக்காயாக ஆக்கி விட்டார்கள்!

⌘ டி.வி. பாலகிருஷ்ணன்,குழித்துறை

கே. காசியில் இறக்க முக்தி என்கிறார்களே காசியில் வாழ்ந்து வருபவர்கள் அனைவருக்கும் பின்னால் முக்தி கிடைக்குமா? அங்கு பாவம் செய்பவர்களே கிடையாதா?

ப: அவரவர் செய்த பாவ, புண்ணிய காரியங்களை வைத்துத்தான் இது நிர்மாணிக்கப்படும். காசிக்குப் போய் இறப்பது என்பது ஓரளவு புண்ணிய காரியமாகக் கருதப்படுகிறது. பாவ மலையாக வாழ்ந்து விட்டுக் காசியில் போய் இறந்து விட்டால் பலன் ஏற்படுமா?

⌘ இரா. பார்த்திபன்,
வயலூர்-604502

கே. நீங்கள் சமீபத்தில் ரசித்த நகைச்சுவை எது?

ப: நிறைய உண்டு. ஆனால் சுருக்கமாகவும், சாமர்த்தியமாகவும் அமைந்த ஒன்றை — ஆங்கிலத்தில் உள்ளதைத் தமிழ்ப்படுத்த முடியாது — அப்படியே தருகிறேன்.

# கடுகு

What is Strange about a pair of legs? The Bottom is at the top!

⌘ கு. அருணாசலம், தென்காசி

கே.. நாதஸ்வரம் என்பதன் தமிழ்ச்சொல் என்ன?

ப: பெருவங்கியம் என்கிறார்கள்.

⌘ சிவசக்தி, சென்னை-4

கே. அரசியல் சாக்கடையில் விழாமலேயே இலக்கிய சேவை செய்து வருகிறீர்களே (கண்ணதாசன், ஜெயகாந்தன், ம.பொ.சி, குமரி அனந்தன் மன்னிப்பார்களாக!)

ப: யாரங்கே? இந்தப் புலவர் பெருமான் சிவசக்தி அவர்களுக்கு ஆயிரம் பொற்கழஞ்சுகளை நன்றியுடன் கொடு! (தங்கக் கட்டுப்பாடு அதிகாரி என்னை மன்னிப்பாராக!)

⌘ என். சக்ரபாணி, கோவை-11

கே. உரக்க எண்ணுவதற்கும் முணுமுணுப்பதற்கும் என்ன வித்தியாசம்?

ப: முன்னது சிந்தனை; பின்னது நிந்தனை!

⌘ ஸ்ரீநாத் கோபாலன்,திருச்சி-16

கே. சென்ஸார் போர்டில் நியமனம் பெற என்ன தகுதி இருக்க வேண்டும்?

ப: குட்மன் ஏஸ் என்கிற அமெரிக்க எழுத்தாளரின் ஐடியாவைப் பின்பற்றி, இதற்குப் பதில் தருகிறேன். இரவு நேரத்தில் தெரு வழியே ஒருவன் போய்க் கொண்டிருக்கிறான். மூன்றும் மாடி அறை விளக்கு ஒரு வீட்டில் எரிந்து கொண்டிருக்கிறது. 'பாவம், வேலைக்குப் போன பிள்ளைக்காக ஒரு தாய் காத்துக் கொண்டிருக்கிறாளோ!' என்று அவன் நினைக்கிறான். இன்னொரு ஆசாமி அதே




# பதில்கள்!

தெரு வழியாகப் போகிறான். மாடி அறை விளக்கைப் பார்த்ததும், ''அந்த அறையில் ஏதோ கசமுசா நடக்கிறது'' என்று நினைக்கிறான். பின்னவர்போன்று நினைக்கும் மனப் பக்குவம் உடையவர்கள் சென்ஸார் போர்டில் இடம் பெறுகிறார்கள். தகுதி புரிந்து விட்டதா?

⌘ சித. வைரவன், சென்னை-17

கே. தூக்கு தண்டனை அவசியமா என்று ஒருத்தர் கேட்டதற்குப்பதில் சொல்லாமல் விழித்திருக்கிறீரே இருக்குறள் (550ம் எண்) படித்ததில்லையா?

ப: 'கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களை கட்டதனொடு நேர்' என்பதுதானே, அந்தக் குறள். கொடிய செய்வாரைக் கொலை தண்டனையால் தண்டிக்கலாம் என்கிறார் வள்ளுவர். 'கொடிய' என்பதற்குத் தக்க அளவு, வரைமுறை நிர்ணயிப்பது யார்? இதனால் சில கொலை தண்டனைகள் நியாயமாகவும் வேறு சில அநியாயமாகவும் நமக்குத் தோன்றும். ஆகவே கொலை தண்டனையின் அவசியத்தைப் பற்றி இருவித கருத்துக்கள் இருந்து கொண்டே இருக்கும்.

பரிசு பெறுபவர்:
சித. வைரவன்
10, தீனதயாளு தெரு,
சென்னை-17.

மதுரையில்

# எவர்சில்வர், அலுமினிய

பாத்திரங்கள், பிரஷர்குக்கர்
மற்றும் பரிசுப் பொருட்களுக்கு

# ஆனந்தா
## மெட்டல் கம்பெனி

போன்: 31991.

43, காமராஜர் சாலை [கீழவாசல்], மதுரை - 9

---

நாடெங்கும் புகழ் பெற்ற **சாலிடேர்** டெலிவிஷனுக்கு



தமிழகத்தின் தனிப்புகழ் பெற்ற

# சூப்பர் டீலர்

## ஏஜென்ஸீஸ் &
## ஏஜென்ஸீஸ் A/C

18, தெற்கு உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-17.
போன்: 440004/440725

# Solidaire
**SOLID STATE TV - that seldom fails!**

"சாலிடேர்" டிவிக்குரிய அனைத்து துணை சாதனங்களையும், மிக நியாயமான விலையில் தருகிறோம். இவைகளின் உற்பத்தியாளர்களாகவோ அல்லது டீலர்களாகவோ நாங்களே இருப்பதால் இவை தரத்தில் மிக உயர்ந்தவை.









அந்தக்காலம் முதல் இந்தக் காலம் வரை திரையில் இசைக் கருவிகளை மீட்டாத நட்சத்திரங்களே இருக்க முடியாது. அப்படிப்பட்ட நட்சத்திரங்களுள் சிலரை இங்கே மேடை ஏற்றியுள்ளோம். யார், யார் எந்தப் படத்தில் இப்படிக் காட்சி யளித்தார்கள் என்று கண்டு பிடியுங்கள் பார்க்கலாம் :

விடை 48ம் பக்கம்-

தொகுப்பு : திரைஞானி

# மனசு

ஜோதிர்லதா கிரிஜா



**சா**வித்திரி கண்களை மலர்த்திக் கொண்டு பார்த்தாள். மங்களா தான் நின்றுகொண்டிருந்தாள். கொஞ்சம் பூசினாற்போல் இருந்தாள். பளபளவென்று இருந்தாள். மகிழ்ச்சியான வாழ்க்கையால் உடம்பு முழுவதும் பூரித்துக் கிடந்தது. எல்லாவற்றுக்கும்மேலாக நிறைமாதமாக இருந்தாள். சாவித்திரிக்கு மனசு பொங்கிற்று. 'அடிப் பாவிப் பெண்ணே எவனையோ கல்யாணம் பண்ணிண்டு-கல்யாணமா அது முதல்லே? ஓடின்னு போனே? — ஒரு வளைகாப்பு நடந்திருக்குமா, சீமந்தம் நடந்திருக்குமா? ஒன்பது மாசத்துக்கு மேலே ஆயிடுத்து போல இருக்கே? இன்னும் வயிற்றைத் தூக்கிண்டு ஆபீசுக்கு வேலைக்குப் போறே. உன் தலையிலே இப்படிக் கஷ்டப்படணும்னு எழுதியிருக்கிறச்சே யாரால என்ன பண்ண முடியும்? என்ன பிடிவாதம் உனக்குத் தான். எம்புட்டு அழிச்சாட்டியம்? இப்பக் கிடந்து அவதிப்படு. வயித்தைச் சாக்கண்டு இந்த நிலைமையிலேயும் ஆபீசுக்குப் போய்ச் சம்பாதிச்சு வயிறு வளர்க்கணும்னு பகவான் உன் தலையில எழுதியிருக்கறச்சே, கேவலம் மனுஷாளாலே எப்படி அதை மாற்றி எழுத முடியும்? அடிக் கடன்காரி... உனக்கும் புத்தி இப்படிப் போகுமா? உன்னை வளர்த்ததுல என்ன குறைச்சல்? உங்க பாட்டி இருக்கணும். இருந்தா தூக்குப் போட்டுண்டு பிராணனை விட்றுப்ப....'

சாவித்திரி அவசரமாகத் திருவல்லிக்கேணிக்குப் போக வேண்டியிருந்தது. தன் இரண்டாவது மகளின் திருமணம் பற்றி ஓர் அம்மாவிடம் பேசிவிட்டு வருவதற்காக. அதற்கென்று கிளம்பிப் பேருந்து நிறுத்தத்துக்கு வந்து நின்ற நேரத்தில் மங்களாவைப் பார்க்க நேர்ந்தது. ஒரு கெட்ட சகுனம் மாதிரி அவள் நெஞ்சில் கசப்பாக இறங்கியது. மங்களாவைப் பார்த்ததுமே அவள் சற்றுத் தள்ளியே நின்று கொண்டிருந்தாள். தன்னை அவள் பார்த்துவிடக் கூடாது என்பது போல் மிகவும் ஒதுக்கமாகவும் கூடியவரையில் யாருக்குப் பின்னாலோ தன்னை மறைத்துக் கொண்டும் நின்றாள்.

வாய் நிறைய வெற்றிலையுடன் உதடுகள் சிவக்க, முசு முசென்று பெருமூச்சு வாங்க நின்ற மகளைப் பார்க்கப் பார்க்க அவளுக்கு வயிறு எரிந்தது.

வீட்டை விட்டு அவள் ஒரேயடியாகப் போய் விட்ட பிறகு இன்று தான் அவளைப் பார்க்கிறாள். அவளுடைய கணவன்தான் இரண்டொரு தரம் அவர்கள் வீட்டுக்கு வந்து தங்களை மன்னிக்குமாறு வேண்டினான். ஆனால் சாவித்திரியின் மனசு துளியும் இளகவே இல்லை.

அவளுக்கு அருவருப்பாக இருந்தது. 'பெண்களை வெளியே அனுப்புவதால்தானே இது மாதிரியான அக்கப்போர்களெல்லாம்' என்று பெருமூச்சுவிடத்தோன்றியது. சட்டென்று தன் கணவன் மீது ஆத்திரம் பொங்கிற்று. பத்தாவது வகுப்போடு நிறுத்துங்கோன்னு தலை தலையாய் அடிச்சுண்டேன். கேட்டாரா? காலேஜ்ல சேர்த்துப் படிக்க வெச்சார். காலேஜ்ல படிச்சா கெட்டுத்தான் போகணும்னு அர்த்தமா என்ன? இவ மாதிரிப் பெண்களெல்லாம் கெட்டுப்போறதுக்குக் காரணமா வேணும்? காலேஜ்லெ படிக்கிற எல்லாப் பொண்களுமேவா ஓடிப் போயிண்டிருக்கா — அம்மா வேண்டாம், அப்பா வேண்டாம்னு?.. இது துக்கிரி புத்தி. அதுதான்...'

யாரோ ஒரு பெண் மங்களாவுக்குப் பக்கத்தில் வந்து நின்று அவளைப் பார்த்துச் சிரித்ததைக் கண்டு 'அவளுடைய சிநேகிதி போலிருக்கு' என்று நினைத்துக் கொண்டாள்.

'மங்களா திரும்பிப் பார்க்காமல் இருக்க வேண்டுமே?' என்று சாவித்திரிக்குக் கவலையாக இருந்தது. நாலு பேருக்கு எதிரில் அவள் அம்மா என்று அழைத்தபடி தன்னிடம் நெருங்கக் கூடும் என்ற அச்சம்தான் அதற்குக் காரணம். அப்படி அழைத்தபடி அவள் தனக்குப் பக்கத்தில் வந்து நின்றால் எப்படி எதிரொலிப்பது என்ற கேள்வி அவளைக் குடையத் தொடங்கியது.

'எவ்வளவு சொன்னேன்? துளியாவது சட்டை பண்ணினாளா? பெத்த தாயார் தகப்பனாரை விட எவனோ ஒருத்தன்— ஆறு மாசத்துப் பழக்கத்துல — ஒசத்தியாப் போய்ட்டான் அவளுக்கு. அம்மா வேண்டாம், அப்பா வேண்டாம், கூடப் பொறந்

தவா வேண்டாம், வேற எதுவும் வேண்டாம்னு தோணிப் போயிடுத்து...''

'அவளுக்கும் திருவல்லிக்கேணியிலதானே ஆபீஸ்? ஒருவேளை ரெண்டு பேரும் ஒரே பஸ்ல ஏறிக்கும்படி ஆயிடுமோ?.. அவ முதல்ல ஏறிப் போகட்டும். எனக்கென்ன அவசரம்? பத்து மணிக்கு டாண்ணு அங்கே இருக்கணுமா என்ன? அவ போனதுக்கு அப்புறம் அடுத்த வண்டியைப் பிடிச்சு நான் போய்க்கறேன். இவ என்னைப் பார்க்க வேண்டாம். நாங்க ஒருத்தர் மொகத்துல ஒருத்தர் விழிக்க வேண்டாம்.'

...அவளோட ஆம்படையானுக்கு வேலை போயிடுத்துன்னு சொன்னாளே அவளோட சிநேகிதி ரமா? ஒருவேளை ரொம்பக் கஷ்டப்படறாளோ? பார்த்தா அது மாதிரித் தெரியல்லே. செழுமையாத்தான் இருக்கா. அவதான் சம்பாதிக்கிறாளே? இப்போதைக்கு ரெண்டே பேருதானே? இவ ஒருத்தி சம்பாத்தியம் போறும்தான். குழந்தை வந்துட்டாத்தான் கஷ்டம். இவளுக்கும் நிறைய லீவு எடுக்கும்படி இருக்கும்...'

சென்ற மாதம் தற்செயலாகச் சந்தித்த அவளுடைய தோழி ரமாவிடமிருந்து அவள்



கணவன் வேலை செய்து கொண்டிருந்த தொழிற்சாலையைத் தொழிலாளர் தகராறு காரணமாகத் தற்காலிகமாக இழுத்து மூடிவிட்டதாக அவன் தெரிந்துகொள்ள நேர்ந்தது. அந்தச் செய்தி சாவித்திரியைப் பாதிக்கவில்லை. 'வேணும் நன்னா. சோத்துக்குத் திண்டாடட்டும். அப்பத்தான் புத்தி வரும்.' என்று அவள் சொன்னாள்.

22-ம் இலக்கமிட்ட பேருந்து வந்தது. கூட்டமாக இருந்தது. மங்களாவும் அவள் தோழியும் வண்டி பிதுங்கி வழிந்ததைக் கவனித்து இருந்த இடத்தை விட்டு அசையாமலே இருந்து விட்டதைக் கண்ட சாவித்திரி, ஆண்களின் கும்பல் அவர்களில் சிலர் தொற்றி ஏறிக்கொண்டு விட்டதன் விளைவாகக் குறைந்து போன நிலையில் தன்னை மங்களா பார்த்துவிடப் போகிறாளே என்ற கவலையால் இன்னும் சற்று நகர்ந்து போய் அவளுக்குப் பின்புறமாக நின்று கொண்டாள். அங்கே இருந்த ஒரு சின்ன மரம் அதற்கு வாய்ப்பாக இருந்தது. மங்களாவின் பார்வையிலிருந்து தன்னை முழுவதுமாக மறைத்துக் கொள்ள முடிந்த அதே நேரத்தில் அவளுக்குப் பின்னால் மிக அருகில் இருக்கும்படியாயிற்று.

''ஏன் இன்னும் ஆபீசுக்கு வரேடி, மங்களா?'' என்று அந்தப் பெண் கேட்டது காதில் விழுந்தது.

''அவருக்குத்தான் வேலை இல்லையேடி ஜானகி. என் ஒருத்தி சம்பளத்துல தானே காலம் கழிச்சாகணும். மெடர்னிடி லீவ் வேற எடுத்தாகணும். பிரசவத்துக்கு ரொம்ப முன்கூட்டி மெடர்னிடி லீவை எடுத்துட்டா அப்புறம் மேல் தேவைச்சுச் சம்பளம் இல்லாத லீவ்தான் கிடைக்கும். அப்புறம் குழந்தைக்குப் பால் வாங்கக்கூடக் கையில காசு இருக்காது... அதுக்குத்தான் பிரசவத்துக்கு முதல் நாள் வரைக்கும் கூட ஆபீசுக்குப் போறதுன்னு தீர்மானிச்சுட்டேன்.''

'நன்னா அவதிப்படு. என் பேச்சைக் கேட்டு ஒழுங்கா நடந்திருந்தா இப்ப ஹாய்யா ரெஸ்ட் எடுத்துண்டு எங்கூட இருக்கலாமோல்லியோ?'

''அது சரி.: டேட் சொல்லியிருக்காளா டாக்டர்?''




''ஆச்சு. இன்னும் ஒரு வாரத்துக்குள்ள எப்படியும் ஆயிடும்னு சொல்லியிருக்கா.''

''ப்ரைவேட் டாக்டர்தானே?''

''ப்ரைவேட் டாக்டருக்கெல்லாம் குடுக்கிறதுக்கு நான் பணத்துக்கு எங்கேடி போறது. கவர்ன்மெண்ட் மெடர்னிடி ஹாஸ்பிடல் தான்! அங்க அட்மிட் ஆனாத்தான்னே, மெடிகல் ரீஇம்பர்ஸ்மெண்ட் கிடைக்கும்!''

'மருந்துச் செலவெல்லாம் திரும்பி வரணும்கிறதுக்காக தர்மாஸ்பத்திரிக்காபோறே? ஒழுங்கா, முறையா, என் சொல் பேச்சைக் கேட்டு நடந்திருந்தா இப்படிப் பிச்சைக்காரி மாதிரி அலைய வேண்டாமோல்லியோ? அவாவா திமிருக்கு ஏத்தபடிதானே பகவான் படியளப்பான்? அன்னிக்கு என்னைத் துடிக்க விட்டியோன்னோ! இன்னிக்கு அவதிப்படு!'

''மிஸ்டர் ஜேம்ஸ் ஏதாவது வேலைக்கு முயற்சி பண்ணிண்டிருக்காராடி?''

''டெம்பரரி ஜாப்தான் செய்யறார். என்னு, இன்னும் அஞ்சாறு மாசத்திலே அவரோட கம்பெனியைத் திறந்துடுவான்னு பேசிக்கறா. ஆனா அதுவரைக்கும் ஏதாவது பார்ட்டைம் ஜாப் கிடைச்சாலும் பார்க்கலாம்னு, வேலை கிடைக்கிறது அத்தனை ஈஸியாகவா இருக்கு இந்தக் காலத்திலே?''

''உங்கம்மாப்பா உன்னை மன்னிக்கவே இல்லையா இன்னும்?''

மங்களா வாய் விட்டுச் சிரித்தாள். ''அவா ரெண்டு பேருக்கும் ஈரமே இல்லாத மனசுடி. அப்பா கல்லா யிருந்தா அம்மா இளக்கமாயிருப்பா. அம்மா கல்லா இருந்தா அப்பா இளக்கமா இருப்பா. அப்படித்தான் நாம பொதுவாப் பார்க்கறோம். ஆனா எங்க வீட்டிலே ரெண்டு பேருமே சரியான பாறாங்கல்லுன்னா பாறாங்கல்லுடி!''

'ஓகோ, நாங்க ரெண்டு பேரும் பாறாங்கல்லா? நீ தங்கக் கட்டியாக்கும்! எம் புட்டுக் கெஞ்சினேம்? உன் மனசு துளியாவது எறங்கித்தோ? எங்களையா பாறாங்கல்லு பழிக்கிறே?'

திடீரென்று மங்களா நின்றிருந்த இடத்தில் ஒரு சலசலப்பு.

ஒரு நிமிஷ உந்துதலில் அவள் எட்டிப் பார்த்து மங்களா அரை மயக்கத்தில் தரையில் உட்கார்ந்திருந்ததையும் அவளோடு பேசிக் கொண்டிருந்த அந்தப் பெண் கவலை அடைந்து அவள் தோள் மீது கை பதித்துக் குனிந்து கொண்டிருந்ததையும் கவனித்தாள்.

அரைக் கண் மூடிய நிலையில் இருந்த மங்களா, ''என்னை மெடர்னிடி ஆஸ்பத்திரிக்கு அழைச்சுண்டு போய் அட்மிட் பண்ணிட்டு, அப்படியே என் ஹஸ்பெண்டுக்கு எப்படியாவது தகவல் அனுப்பிடு, ஜானகி!'' என்று சொன்னது சாவித்திரியின் காதுகளில் விழுந்தது. அடுத்த கணம் மங்களாவின் இரு கண்களும் முழுசாகவே மூடிக் கொண்டதையும், அவள் சாயத் தொடங்கியதையும் கவனித்துச் சாவித்திரி விரைந்து ஓடிப் போய் அவளைத் தாங்கிக் கொண்டாள்.

# இரண்டே வருடங்களில் விற்பனையில் முதல் இடம்

# JOHNSON®

# மிக்ஸர் கிரைண்டர்

25 வருடத்திற்கு மேற்பட்ட அனுபவமும், இந்தியாவிலே சமையலறைச் சாதனங்களில் ஏராளமான வகைகளும் கொண்ட ஜான்சனின் சீரிய படைப்பு ஜான்சன் மிக்ஸர்—கிரைண்டர். எங்கெங்கும் அறிமுகப் படுத்தினதால் ஐயமின்றி தலை சிறந்ததென இரண்டே வருடங்களில் பீடு நடை போடுகிறது.

ஏன் எனக் கேட்பின் :

---

இலவசம் ! தனி எவர்சில்வர் கிண்ணம்! உலர்ந்த அரவைக்கென தனியான எவர்சில்வர் கிண்ணமிருப்பதால் மசாலாக்களின் மணமும், ருசியும் மில்க் ஷேக்குகளில கலக்காமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



அதிக சுகாதாரம் பாகங்களை எளிதாக கழட்டும்படி தயாரிக்கப் பட்டிருப்பதால் நீங்கள் துப்புரவாகக் கழுவ முடிகிறது. உணவுப் பண்டங்களின் துகள்கள் உள்ளே நின்று விடும் சந்தர்ப்பம் இல்லை.

---

முழுமையான பாதுகாப்பு. பிளேட் பாகங்கள் இரு கிண்ணங்களிலும் உறுதியாக இணைக்கப் பட்டிருப்பதால் இயக்கத் தில் பிளேட் பறந்து விடாமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



கன ரக ஓட்டம் அதிக உறுதியான 450 வாட் மோட்டார் நமது இந்திய சமையலுக்கென்றே சிறப்பாக அமைக்கப் பட்டிருக்கிறது. 45 நிமிடங்கள் நிறுத்தாமல், தடையின்று ஓட்டலாம்.

---

மற்ற சிறப்பு அம்சங்கள்:

- மோட்டார் குளிர்ச்சியாக இருப்பதற்கென தனியான காற்றோட்டம்
- சீரிய கலவை மற்றும் அரவைக்கென மேம்படுத்தப்பட்ட பிளேட் அமைப்பு
- ஒரு வேகத்திலிருந்து மற்றொரு வேகத்திற்கு செம்மையாக மாற்ற இஞ்சர் ஸ்விட்ச்
- ஒரு வருடத்திற்கு உத்திரவாதம் ஜான்சன்

**JOHNSON®**

## இயக்கத்திலும், ஆற்றலிலும் இணையிலாச் சிறப்பு கொண்டது

JOHNSON
MIXER-GRINDER

ASP-BE-8001A

# 13

**மா**டர்ன் ட்ரை கிளீனிங்கின் மாடி அறையில் சுமங்களா மட்டும் தனியே இருந்தாள். அன்று அவள் அதிக நேரம் வேலே செய்ய வேண்டியிருந்தது.

பிற்பகல் முதலே சுகுமாரனின் செயலில் ஒரு மாறுபாட்டைக் கவனித்தாள், சுமங்களா. அவளிடம் அவன் பல சந்தேகங்களைக் கேட்டான். அவள் சற்றுக் குழப்பத்துடன் இருப்பதைக் கவனித்தான்.

''நீங்கள் நேற்றையிலிருந்து சரியாக இல்லை என்று நினைக்கிறேன்.''

அவன் அந்தரங்கமான முறையில் இப்படிக் கேட்டவுடன் அவள் கண் கலங்கிப்போனாள். இருந்தாலும் அதிகமான சோகத்தை வெளிக்காட்டிக் கொள்ளப் பிடிக்காமல் அவனேயே சில கணங்கள் பார்த்துவிட்டுத் தன் வேலையில் ஈடுபட்டாள்.

பெரிய மர அலமாரியில் சலவை செய்யப்பட்ட துணிப் பாக்கெட்டுகளை வரிசைக் கிரமமாக அடுக்கிக் கொண்டிருந்தான் அவன். ஒவ்வொரு பாக்கெட்டிலும் அட்டையில் நெம்பர் எழுதிக் கோத்தான்.

அவளுடைய மேஜை முன் வந்து நின்றான்.

''நேற்று மாலை உங்களை நான் நங்கநல்லூரில் பார்த்தேன். உங்களுடன் அந்தப் புரபஸர் மேடமும் இருந்தாங்களே!''

''ஆமாம், உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''நான் டிரெயினுக்காகப் பழவந்தாங்கல் பிளாட்பாரத்தில் நின்றிருந்தபோது உங்களைப் பார்த்தேன். அங்கே யார் இருக்காங்க? சொந்தக்காரங்க யாராவது?''

''சொந்தக்காரங்க இல்லை. ஒரு விரோதக்காரங்க'' என்றாள் புன்னகையுடன்.

''விரோதியா?''

''ஆமாம், விரோதிதான்!''

''விரோதியைச் சந்திக்க இப்படித் தனியே போகலாமா ஆண் துணை இல்லாமல்...!''

''அவரை நான் தனியாகவேதான் சந்திக்க வேண்டும். கோமதி என் தோழி. அவளால் கூட எனக்குத் தொடர்ந்து உதவ முடியாமல் போகலாம். என்றாலும் நான் அவரைத் தனியாகச் சந்தித்தே ஆகவேண்டும். தனியே மோதியே ஆக வேண்டும்.''

''உங்களைப் பற்றி எனக்கு அதிகமான விவரமொன்றும் தெரியாது. என்றாலும்... நீங்கள் விவாகமானவர்... கணவரை விட்டுத் தனியே இருக்கிறீர்கள் என்பது தெரியும்.''

''எப்படித் தெரியும்?'' என்று சுமங்களா ஆச்சரியத்துடன் கேட்டாள்.

''உங்களை இங்கே அறிமுகப்படுத்து முன் அந்தப் புரொபஸர் மேடம்தான் சொன்னாங்க. 'அந்தப் பொண்ணு கல்யாணம் ஆன பொண்ணு. அதுகிட்டே கொஞ்சம் இங்கிதமாகப் பழகுங்க. மனப் போக்கும், அதனுடைய வாழ்க்கைப் பின்னணியும் தெரியாமல் வேறு விதமாக நடந்து கொண்டு தர்மசங்கடத்தை உண்டாக்கிடாதீங்க. இந்த வேலை கூட அதுக்கு ஒரு தற்காலிகமான ஷெல்டர்தான். அதனுடைய எதிர்காலத் திட்டம் பெரியது. ஒரு காலே ஊன்ற இந்தத் தொழில் முதலாவது படி' என்று சொல்லியிருக்காங்க.''

கோமதி மேல் கோபமாக வந்தது சுமங்களாவுக்கு.

''அதனால்தான் சொன்னேன்... உங்களுக்கு எவ்வித உதவி வேண்டுமானாலும் நான் செய்வேன். என்னை மனப்பூர்வமாக நீங்கள் நம்புவதாக இருந்தால்...''

''உங்களைப் பூர்ணமாக நம்புவது நம்பாதது என்கிற பேச்சுக்கே இடமில்லை. கோமதி என்ன சொன்னாங்களோ அது அவ்வளவும் உண்மை. நான் ஒருவரை நம்பி ஏமாந்து போய்விட்டேன். எனது எதிர்காலக் குடும்ப வாழ்க்கை என்பது கேள்விக் குறியாகவே இருக்கிறது. அது எப்படி, எங்கே எந்த ரூபத்தில் அமையப் போகிறது என்று ஒன்றுமே தெரியவில்லை. பனி மூட்டத்துக்குள் இருப்பது போல் நாட்களைக் கழித்துக்கொண்டிருக்கிறேன்.''

''அவர் உங்களை முழுமையாக ஒதுக்கி விட்டாரா?''

''அநேகமாக அப்படித்தான் என்று நினைக்கிறேன். அன்று என்னைப் பதிவுத் திருமண அலுவலகத்தில் பார்த்ததோடு சரி. முன்பு இருந்த வீட்டிலும் இப்போது இல்லை. அவரை எப்படியேனும் சந்திக்க வேண்டும்



என்று இரண்டு முறை முயற்சி செய்தேன். முடியவில்லை. இருப்பிடம் கூடத் தெரிய வில்லை.''

''விவாகமாகி இவ்வளவு நாளாகியும் உங்களைப் பார்க்க வராதவரை நீங்கள் ஏன் போய்ச் சந்திக்க வேண்டும்?''

''மரியாதை அடிப்படையில்தான். என்ன இருந்தாலும் நான் ஒரு பெண். என்பக்கத்துக் கடமை என்று 'சில உண்டல்லவா? அதை நான் செய்தாக வேண்டும். அநேகமாக இன்னும் ஒரு வாரத்தில் அவரைச் சந்திக் கின்ற சந்தர்ப்பம் வரும் என்று நினைக்கிறேன். ஒன்று அவராக என்னைத் தேடிக் கொண்டு வரவேண்டும்; அல்லது தேடிக் கொண்டு வரும் படி செய்ய வேண்டும்.''

''உங்கள் பிரெண்ட் சொன்னதனால் நான் இதுவரை உங்களிடம் ஒன்றுமே கேட்கவில்லை. இதை இப்படியே நீடிக்க விட என் மனம் இடந்தரவில்லை. மனதில் உறுத்திக்கொண்டே யிருந்தது. இன்று கேட்டுவிட்டேன். உங் களுக்கு எவ்வித உதவியானாலும் நான் செய் கிறேன். செய்வேன். கோமதியை நம்பு வது போல் நீங்கள் என்னையும் நம்பலாம். என் னிடமும் உங்கள் மனக் கவலைகளைக் கூறலாம்....''

''நன்றி மிஸ்டர் சுகுமாரன். அவன் உதவிகூட எனக்குத் தாற்காலிகமானதுதான் போலிருக்கிறது. அவனுடைய சகோதரன் அவனுக்குத் திருமணம் செய்யத் தீவிர மாக இருக்கிறார். அவர் இதில் முனைந்து ஈடு பட்டிருப்பதைப் பார்த்தால் இன்னும் ஒன் றிரண்டு மாதங்களில் அவனைப் பிரிய வேண் டிய சூழ்நிலை ஏற்பட்டாலும் ஏற்படலாம். இப்பொழுதே 'அவனுக்கு உரிய வாழ்த்து மடலை நான் தயாரித்துக் கொண்டிருக் கிறேன்.''

''நான் உங்களுக்குத் துணையாக இருக் கிறேன்'' என்று அவன் கூறிவிட்டுக் கீழே இறங்கிப் போனான்.

சீ மங்களா அந்த இரண்டு மாடிக் கட்டடத் துக்குள் நுழைந்தபோது மாலை மணி நான்கு இருக்கும். ஒவ்வொரு அலுவலகமாக வெளியே நின்றபடி பார்த்தாள்.

அலுவலகங்கள் தனித் தனியே பெரிய பெரிய கூடங்களாகப் பிரிந்திருந்தன. இரண்டு கூடங்களையும் நடை பாதையில்

# வீட்டில் அணைந்த விளக்கு

— மகரிஷி —



பிரிப்பது பெரிய கண்ணாடிப் பிரேம்கள் மட்டுமே.

வெளியே நின்று பார்த்தாள். முழுமையான ஹாலும் அதற்குள் அருகருகேயும், எதிரும் புதிருமாகவும் உட்கார்ந்து வேலை செய்கிற ஊழியர்களும் தெரிந்தனர்.

அவள் கண்கள் முதலில் பயணம் செய்த இடம் பாங்க் அலுவலகம்.

சுமங்களா தேடிய அந்தப் பெண் அங்கே இல்லை என்பதை ஊர்ஜிதம் செய்துகொண்டு அடுத்தபடியாக இன்ஜினியரிங் உதிரி உறுப்புக்கள் நிறுவனத் துக்கு வெளியே வந்து நின்றாள். அங்கே அதிகமான ஊழியர்கள் இல்லை. அது ஒரு சிறிய அறை போலப் பத்துப் பதினைந்து ஊழியர்களைக் கொண்டதாக இருந்தது.

அந்தப் பெண் அங்கேயும் இல்லை. மாடியின் இரண்டாவது தளத்துக்குப் போகும் மாடிப் படி அருகில் 'ஸ்டார் பிலிம் மேக்கர்ஸ்' என்று எழுதப்பட்டு, சுவரில் ஓர் அம்புக் குறியும் இருந்ததைப் பார்த்தாள்.

அவளுடைய தோற்றத்தை ஒரு முறை நினைவுபடுத்திக் கொண்டபோது அவள் இந்தப் பிலிம் கம்பெனியில் பணி புரிகிறவளாகத்தான் இருக்க வேண்டும் அல்லது இதனுடன் தொடர்பு உள்ளவளாக இருக்க வேண்டும் என்று தோன்றியது, சுமங்களாவுக்கு.

பச்சை நிறக் கார்பெட் விரிக்கப்பட்ட மாடிப் படிகளில் ஏறினாள். மாடிப் படி முடியும் இடத்திலேயே ஒரு கண்ணாடிக் கதவுக்கு மேல் மீண்டும் அதே 'ஸ்டார் பிலிம் மேக்கர்ஸ்' என்ற வெண்மையான எழுத்துக்கள்.

ஏதோ ஓர் இடைவெளி வழியே மெல்லிய வாத்திய இசை வழிந்து கொண்டிருந்தது.

கண்ணாடி வழியே உள்ளே பார்த்தாள்.

குறுகலான நடைபாதை. அதில் எதிரெதிரே இரண்டு சோபாக்கள். அதற்கடுத்து இருந்த மரக் கதவு முழுமையாகச் சாத்தப்பட்டிருந்தது.

கண்ணாடிக் கதவைத் தள்ளினாள்.

அது திறந்து கொண்டது.

உள்ளே போனாள்.

அடுத்தது மரக் கதவு.

இங்கேதான் அவள் இருப்பாள் என்று எப்படி நிச்சயிக்க முடியும்? பெயர் தெரியாமல் யாரைக் கேட்பது? எப்படிக் கேட்பது? தன்னை யார் என்று சொல்லிக் கொள்வது? பரமேஸ்வரன் பெயரைச் சொல்லி அவளை எப்படி விசாரிப்பது?

இத்தனை விதமான குழப்பத்துடன் இருந்தபோதே அவளுக்குத் திடீரென்று ஒரு யோசனையும் தோன்றி விட்டது. தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கதவின் மேல் கையை வைத்து விட்டாள்.

கண்ணாடிக் கதவுக்கு அப்பால் நின்ற போது கேட்ட வாத்திய இசை இப்பொழுது தெளிவாக உள்ளிருந்து வந்து கொண்டிருந்தது. அதோடு டைப் மிஷின் சப்தம் சிறிதாகக் கேட்டது.

கதவு சுலபமாகத் திறந்து கொண்டுவிட்டது. கதவு திறந்த உடனேயே முன் அறையில் பெரிய மேஜையும், நாற்காலியும் இருப்பது அவள் கண்ணில் பட்டது. அதன் மேல் இடப்புறமும் வலப் புறமும் இரண்டு பிளாஸ்டிக் டிரேக்கள் இருந்தன. வெண்மை நிற டெலிபோன் இருந்தது. மேஜை மேல் காகிதங்களோ ஃபைல்களோ இல்லை. நாற்புறமும் திரும்பக்கூடிய நாற்காலி.

கண்ணாடி அலமாரி ஒன்று இடப்புறமாக இருந்தது. அதில் நிறைய நோட்டுகளும் ஃபைல்களும் இருந்தன. அவ்வளவுதான் அவள் கண்ணில் பட்டது. மேஜை மேல் இருந்த சிறு பிளாஸ்டிக் தகட்டில் ஏ.என் அம்பிகா, பி.ஏ.,பி.ஆர்.ஓ. என்று இருந்தது.

அவள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே டெலிபோன் மணி ஒலித்தது. இப்பொழுது அவள் யாரையுமே அழைக்க வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது. டெலிபோன் மணி அழைப்புக்குப் பதில் சொல்ல, வரப்போகிற நபருக்காக, திறந்த கதவை ஒரு கையால் பிடித்துக் கொண்டு காத்திருந்தாள்.

அண்மையில் பிரபலமான சினிமாப் பாடல் ஒன்றை முணு முணுத்துக்கொண்டே அவள் அங்குள்ள மற்றொரு அறையிலிருந்து வெளிப்பட்டாள்.

அவளேதான்.!

அருகில் பார்க்க எவ்வளவு அழகாயிருக்கிறாள்! எவ்வளவு வசீகரம்! அந்த உடம்பும் அதன் வனப்பும்.... பிலிம் கம்பெனியில் இருக்கிறாள். விரைவில் ஸ்டார் ஆனாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஓட்டமும் நடையுமாக வந்த அந்தப் பெண் நிலைவாயிற் படியில் நின்றிருந்த சுமங்களாவைப் பார்த்து அப்படியே நின்றாள். யார் இவள்? யாரைப் பார்க்க வந்திருக்கிறாள்? அந்த எளிமையான உடையிலும் எவ்வளவு அழகாக இருக்கிறாள்! அதோ முன்புறத்தின் செழிப்பான மார்பின் இடது புறமாக விழுந்து கிடக்கிறதே கூந்தல்.. எத்தனை அடர்த்தி!

இதற்குள் டெலிபோன் மணி இரண்டு முறை அலறிவிட்டது.

டெலிபோன் ரிசீவரைக் கையில் எடுத்துக் கொண்டாள். அதன் குரல் அடங்கிவிட்டது



ஜெய்ப்பூர் அருகே ஒரு 'கழுதைகள் கண்காட்சி' நடைபெற இருந்தது அக்டோபர் மாதத்தில். இதில் மாநிலம் முழுவதிலிருந்தும் கழுதைகள் கலந்து கொள்ளும். இக் கண்காட்சியை நடத்துபவர்கள், பல அரசியல் வாதிகளை விழாவுக்கு தலைமை தாங்க அழைத்தனராம்! ஆனால் யாரும் ஒப்புக்கொள்ள வில்லையாம்!

கழுதைகளின் மதிப்பைக் கெடுக்கவேண்டாம் என்று நினைத்திருப்பார்களோ?

—சம்பத் குமார்

ஆதாரம் : ஸண்டே

போன் ரிசீவரை ஒரு கையில் பிடித்து முகத்தைத் திருப்பி சுமங்களாவையே பார்த்தாள்.

''எஸ்...கம் இன்... யார் வேணும் உள்ளே வந்து உட்காருங்கள்.''

சுமங்களாவை அழைத்து ஒரு நாற்காலியைக் காட்டினுள். போனில் பேசத் துவங்கினுள்.

''யெஸ்... ஸ்டார் பிலிம் மேக்கர்ஸ்... பி.ஆர்.ஓ. அம்பிகா ஹியர்... ஓ நீங்களா?'' என்று போனில் கேட்டுக் கொண்டே சுழல் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.

''பரசு...''

அவள், அப்பெயரை சுமங்களா அங்கே உட்கார்ந்திருக்கும்போதே உச்சரித்தாள். அந்தப் பெயரை உச்சரிக்கும்போதுதான் எவ்வளவு குழைவு!

அவன் டெலிபோனில் என்ன கேட்டானே தெரியவில்லை. இவள், ''ச்சீ டர்டி!'' என்றுள் கொஞ்சலுடன், ''..ஊஹூம் அதெல்லாம் முடியாது. அதான் நேத்து நைட்... உங்கள் இஷ்டம் போல...''— எதிரே இருந்த சுமங்களாவை நினைவு படுத்திக்கொண்டவள் போல் நாணப்பட்டாள், பார்த்துத் தலை குனிந்தாள்.

''பரசு...இப்போ நான் பிஸியா இருக்கேன். அடுத்த வாரம் புதுப் படத்துக்குப் பூஜை. ஆர்டிஸ்ட் கால்ஷீட் பிராப்ளம். அவைலபிள் ஸ்டார்ஸை வச்சுக்கிட்டு அன்னிக்கு பூஜை முடிச்சுடணும்னு அப்பா சொல்லிட்டாரு. பிரஸ்களுக்கு இன்விடேஷன் அட்ரெஸ் டைப் அடிச்சுக்கிட்டு இருந்தேன்.அப்புறமாப்பேசறேன். ஓ.கே...''

அவள் ஒரு சிணுங்கலுடன் ரிசீவரைப் போன் மீது இதமாக வைப்பதைச் சுமங்களா பார்த்தாள்.

''அம்பிகா...!'' எடுத்த எடுப்பில் அவளை இப்படி அழைத்த போது சுமங்களாவின் தொனிக்குள் வேகம் உள்ளடங்கிக் கிடந்தது. ''என் பெயர் சுமங்களா....!''

''என்ன வேண்டும் உங்களுக்கு?''

''உங்களிடமிருந்து சில விஷயங்கள் பற்றி விவரம் வேண்டும்...''

சுவரெங்கிலும் கண்ணாடி பிரேம் போட்டு மாட்டியிருக்கும் போட்டோக்களைப் பார்த்தாள் சுமங்களா.

கதா நாயகனின் தோளில் கையைப் போட்டுக் கொண்டு நிற்பவர்களும்... காட்சிக்கு நடுவே 'டீ' அருந்துவது போலவும்....

''என்ன விஷயம்?''

அம்பிகா இப்படிக் கேட்டவுடன் சுமங்களா எடுத்த எடுப்பிலேயே தன் முதல் கேள்வியைக் கொஞ்சம் கூட ஒளிவு மறைவு இன்றிக் கேட்டாள்.

''பரமேஸ்வரனுக்கும் உங்களுக்கும் இடையில் உள்ள நட்பை நான் தெரிந்து கொள்ளலாமா?''

அம்பிகாவின் முகத்தில் வீச நாழிகையில் வியர்வை அரும்பிவிட்டது.

திடீரென்று காய்ந்துபோன உதட்டை ஈரப் படுத்திக் கொண்டே உமிழ்நீரை விழுங்கினுள்.

அவள் சற்றும் எதிர்பாராத கேள்வி. என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் சில கணம் பிரமித்துப் போய் உட்கார்ந்து



பையன்: அப்பா! இந்த தை மாதத்துக்குள்ளே எனக்கும் விமலாவுக்கும் கல்யாணம் செய்து வைக்காட்டி என்ன நடக்கும் தெரியுமா?
தந்தை: என்ன நடக்கும்?
பையன்: எனக்கும் அவளுக்கும் சிமந்தம் நடக்கும்!
- என். விசாலாட்சி

விட்டாள். பிறகு ஒரு மாதிரியாகச் சமாளித்துக் கொண்டாள்.

''ஏன் கேட்கிறீர்கள்?'' என்றுள் வலுக் கட்டாயமாக வரவழைத்துக் கொண்ட புன்னகையுடன்.

இதற்குச் சுமங்களா பதில் கூறவில்லை. அந்த இடத்தையும் அங்கே நிலவுகிற துல்லியத்தையும் கவனித்தாள்.

''இதென்ன ஃபிலிம் கம்பெனியா?''

''ஆமாம்.''

''ப்ரொடக்ஷனு... டிஸ்ட்ரிபியூஷனு?''

''இரண்டும்தான். நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லவில்லையே?''

''நீங்கள் இங்கே என்னவாக இருக்கிறீர்கள்?''

''நான் மிஸ்டர் நீலமேகத்தின் மகள். அவர்தான் ப்ரொட்யூஸர், டிஸ்ட்ரிபியூட்டர் எல்லாம். நான் அவருடைய ப்ரொடக்ஷன் லைனில் பி.ஆர்.ஓ. ப்ரொடக்ஷன் எக்ஸிக்யூட்டிவ்... ஆபீஸ் மெயின்டனென்ஸ்... இப்படி எல்லாம் உண்டு. எனக்கு இவையெல்லாம் ரொம்பப் பிடிக்கும்.''

''நீங்கள் நடிக்கவும் செய்யலாம். அந்தத் தகுதியும் இருக்கிறது'' என்று சுமங்களா சிரித்துக் கொண்டே கூறினுள்.

''இல்லை. நான் நடிக்கப் போகமாட்டேன். எனக்கு அதிலே இஷ்டமில்லை. நான் கல்யாணம் செஞ்சுக்கப் போறேன்... அது இருக்கட்டும்....'' — அவள் முடிக்கவில்லை.

''யாரை? மாப்பிள்ளை பார்த்துவிட்டீர்களா?''

''ஓ! எல்லாம் முடிந்த மாதிரிதான். நாட்களை எண்ணிக் கொண்டிருக்கிறோம்.''

எல்லாக் கேள்விகளுக்கும் ஒளிவு மறைவின்றி அம்பிகா பதில் சொன்னுள். முன் பின் அறிமுகமற்றவள் என்று கூடப் பார்க்காமல் பேசினுள். இது அவளுடைய நல்ல குணத்தைக் காட்டுவதாக இருந்தது.

''உங்களுக்கு உதவிக்கு ஆள் இல்லையா?''

''இது அப்பாவின் பிரைவேட் ஆபீஸ். என் சம்பந்தப்பட்ட அலுவலை மட்டும் நான் இங்கிருந்து கொண்டு கவனிக்கிறேன். மற்றபடி நிர்வாகம் கோடம் பாக்கத்தில் யுனைடெட் இந்தியா காலனியில் இருக்கிறது.

''நீங்கள் எந்தக் காலேஜ் ஸ்டூடண்ட்?''

''சிடி காலேஜ்.''

''கோமதியைத் தெரியுமா?''

''தெரியும். மாத்ஸ் ப்ரொபஸர். நீங்க யாருன்னு சொல்லாமப் பேசிக்கிட்டே இருக்கீங்களே! ஃபிலிம் விஷயமா ஏதாவது?...''

(தொடரும்)

# தங்கை ஜாகீ

சுபா

சட்டென்று அவன் கண்ணாடிகளை இழுத்து ஜன்னலை மூடினான்.

''நனைஞ்சுட்டியா?'' என்று அவளைக் கேட்டான்.

''இல்லே... ஆனா மெல்லிசா அடிக்கற மழைச் சாரல்னா எனக்கு ரொம்பப் பிடிக்கும்....''

''அடாடா... தோள் பட்டை யெல்லாம் நனைஞ்சுட்டது போல இருக்கே...'' என்று அவள் தோளைத் தொட்டுத் தடவிப் பார்த்தபோது அவள் வெட்கத்தில் குறுகி, ''பரவாயில்லே...காய்ஞ்சுடும்'' என்றாள்.

இவளைப் பக்கவாட்டில் திரும்பிப் பார்த்த போது, அவள் இமைகளுக்குக் கீழே வெள்ளை விழிகள் சுழன்று போதையான பார்வையாய்த் தாக்கின. பஸ்ஸின் கூரையில் எரிந்த நீல விளக்கு அவள் முகத்துச் சிவப்பை வர்ணம் மாற்றிக் காட்டிற்று.

அவன் தோளிலிருந்து கையை மெல்ல எடுத்துக் கொண்டான்.

''குளிருதா?''

''ஊஹூம்....''

''தூக்கம் வருதா?''

''இல்லே...''

''காலையிலேர்ந்தே சுத்திட்டே இருக்கமே டயர்டா இருக்கா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே...''

''நம்ம பார்த்ததிலேயே உனக்கு ரொம்பப் பிடிச்ச இடம் எது?''

''ம்....ம்...'' அவள் யோசித்தாள்.

''மலம்புழா டாம்...'' என்றாள்.

''மலம்புழாவா?'' அவன் மெல்லச் சிரித்தான். ''நீ இன்னும் பிருந்தாவன் கார்டன்ஸ் பார்க்கலே இல்லே... பார்த்தப்புறம் சொல்லு...''

''எப்பப் போனீங்க?''

''போன வருஷம்...''

''யாரோட?''

''என் தங்கச்சியோட....''

''பரவாயில்லே... வாழ்க்கையை நல்லாவே எஞ்ஜாய் பண்ணியிருக்கீங்க... மலம்புழாவுக்குத் தங்கச்சியோட வந்ததா சொன்னீங்க... குருவாயூருக்கும் தங்கச்சியோட வந்ததாச் சொன்னீங்க... அவர் பேர்ல உங்களுக்குப் பாசம் எக்கச்சக்கம். இல்லே?''

''ஆமா... நீ தூங்கு...''

''பரவாயில்லே...''

சொன்னாளே தவிர கண்களை மெல்ல மூடிக் கொண்டாள்.

அவனால் தூங்க முடியவில்லை. பஸ்ஸின் ஓட்டத்தில் தலை குலுங்கிச் சீட்டில் உருண்டு கொடுத்தது.

போன வருஷம் ஞாபகத்தில் புரண்டு வந்தது.

அப்போது பயணம் இந்த மாதிரி டீலக்ஸ் பஸ்ஸில் இல்லை. ஒரு சாதாரண எக்ஸ்பிரஸ் பஸ். தோளோடு நின்று போய்த் தலையைத் தனியாய்த் தவிக்க விடுகிற இருக்கைகள். ஜல ஜல வென்று ஜால்ரா தட்டிக் கொண்டு வருகிற தகர ஜன்னல்கள்... பக்கத்து இருக்கையில் இப்போது போல் இரண்டு நாள் உறவாகப் புது மனைவி இல்லை...



இருபது வருஷத்து உறவு — தங்கை!

தொண தொணவென்று மூச்சுக்கொரு கேள்வி கேட்கிற தங்கை. எத்தனை முறை அவளைக் கோபித்திருப்பான்.

காரம் போர்டு விளையாடுகையில் காயின் சரியாகப் போடத் தெரியவில்லையென்று; சாதம் பரிமாறுகையில் இலையில் முதலில் தண்ணீர் தெளிக்கவில்லை என்று...

ஆஃபீஸுக்கு அவசரம் அவசரமாகக் கிளம்புகிற நேரத்தில் கை நுழைத்துப் பார்த்து, தையல் பிரிகிற சட்டையை அவள் மேல் தூக்கியடித்து...

''தண்டச் சோறு சாப்பிடுகிறவதானே... இதையெல்லாம் தைச்சு வச்சா என்ன?''

ஆண்மையில் அதீதமாய்க் கர்வப்படுகிற துடிப்போ? போன வருஷம் கூட அம்மா அவ்வளவு வற்புறுத்தியிருக்கா விட்டால் ரேணுவை பெங்களூருக்கும், குருவாயூருக்கும் கூட்டிக் கொண்டு போயிருப்போமோ?

''என்னம்மா நீ? நான் ஃப்ரெண்ட்ஸோட போறச்சே இவளை எப்படிக் கூட்டிக்கிட்டுப் போக முடியும்?''

''நம்ம வீட்டுக் குழந்தையைத்தானே கூட்டிட்டுப் போகச் சொல்றேன்...''

''குழந்தையா...? ரெண்டு கழுதை வயசாகுது...''

''கழுதை, இழுதைன்னு பொட்டைப் புள்ளையைப் பேசாதேடா... நீ உன் ப்ரண்ட்ஸோடயே போய்க்க...''

''சுருக்குன்னு கோவிச்சுக்கிறியே... நான் அவளோடயே போய்ட்டு வரேன்... நீயும் வரியா?''

சட்டென்று மனசு இளகிப் போய்த் தாழச் சொல்லிற்று. அம்மாவின் மனசை எந்தக் கணத்திலும் நோகடிக்கக் கூடாது என்று தோன்றியிருக்க வேண்டும். விதவையாய் ஒற்றை ஆளாய் நின்று பேணி வளர்த்தவள் மனசு வாடக் கூடாது என்று நினைத்திருக்க வேண்டும்.

''நான் வரலை. அவளை அழைச்சிட்டுப் போறப் போதும். அதுவும் முழு மனசோட கூட்டிக்கிட்டுப் போறதா இருந்தா மட்டும் கூட்டிக்கிட்டுப் போ...''

பூம் பூம் மாடு மாதிரி தலையாட்டினாலும் கூட ஒரு கட்டளையாய்ப் பாவித்துக் கொண்டுதான் ரேணுவைச் சேர்த்துக் கொண்டது மனசு. ஊருக்குக் கிளம்புகையில் பெட்டியை வாசல் வரைதான் தூக்கி வந்தான். அம்மாவின் பார்வையிலிருந்து மறைந்தவுடன் அதை ரேணுவிடமே தள்ளினான்.



''சும்மா ஜாலியா நடந்து வந்தாப் போதாது.... பெட்டியைத் தூக்கிட்டு வா.''

பஸ்ஸில் போகிறபோது ரேணு அந்தப் புது அனுபவத்தில் லயித்துப் போய்க் குதூகலத்தில் பொங்கிப் போனுள்.

''அருமையான சீனரீஸ் இல்லே...?''

வாசுவின் தொடையில் தட்டி அவள் கேட்டபோது அவன் கையிலிருந்த புத்தகத்திலிருந்து கண்களை நகர்த்தி அவளை முறைத்தான்.

''சீனரீஸ் நல்லா இருந்தா நீ பார்த்துக்கிட்டு வாயேன்... என்னை ஏன் டிஸ்டர்ப் பண்றே?''

அத்தனை சந்தோஷமும் சட்டென்று ஒளிந்து கொண்ட மாதிரி அவளுக்கு முகம் வாடிப் போயிற்று.

அவளுக்குக் கண்ணைச் சுழற்றிற்று. சீரான வேகத்தில் பஸ் நேர் சாலையில் விரைந்து



மனைவி: ஒரு மரபுக் கவிதை

காதலி: ஒரு புதுக் கவிதை

குழந்தை: அவன் தந்த உறவுக்கு அவள் வரவு வைத்ததற்கு ஆண்டவன் எழுதி வைக்கும் ரசீது.

என். முத்து





கொண்டிருந்தது. ஜன்னல் கண்ணாடிகளில் இன்னும் மழைச் சாரல் மெல்லிய தாளமிட்டுக் கொண்டிருந்தது. தோளில் யாரோ தட்டுகிறாற் போலத் தோன்றித் திரும்பிப் பார்த்தான். சித்ரா தூக்கத்தில் தலை ஆடி இவன் மேல் சாய்ந்திருந்தாள்..பாவம்.

நேற்றுக் காலை ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து குளித்து அவனோடு மணையிலமர்ந்து புகையெல்லாம் கண்ணுக்குள் வாங்கிக் கொண்டு அவன் கை தொடுகையில் சிலிர்த்து சிணுங்கி, தாமத உணவை ருசிக்காமல் வயிற்றில் தள்ளி, ரிஸப்ஷனில் தயாராய் அறி முகங்களுக்காக எழுந்து, சிரித்து, உட்கார்ந்து மறுபடியும் எழுந்து, சிரித்து... எண்ணிக்கை மறக்கிற நமஸ்காரங்கள் செய்து, கடைசியாய் ஒரு நாள் தோட்டாயாய் விரிக்கப்பட்ட மெத்தையில் அவனோடு அமர்ந்து கல்யாணச் சடங்குகளின் அநாவசியம் பற்றி விவாதித்து, அவன் நிலை புரிந்து, தன்நிலை சொல்லி, அழுத்தமாய் உறவு பூண்டு தூங்கிப் போனவள். உடனே இன்று வெள்ளி முளைக்கையிலேயே எழுந்து குளித்து அவனோடு தேனிலவு புறப்பட்டு... ரொம்பவும் களைத்திருப்பாள். ரயிலில் கிளம்பியிருந்தால் படுத்துத் தூங்கலாம்.

''ரயில் வேணாங்க. காடும் மலையும்தான் பார்க்கலாம்... பஸ்ஸிலே போனா சுத்தி மனுஷ நடமாட்டமாலும் பார்த்துக்கிட்டு வருவேன்...' என்று ஆசைப்பட்டு பஸ்ஸில் ஏறியவள், வேடிக்கை பார்க்கிற திராணி இல்லாமல் களைத்துச் சாய்ந்துவிட்டாள்.

அந்த இரட்டை இருக்கையின் நடுவில் முளைத்திருந்த கைப்பிடியைப் பின்னுக்குத் தூக்கிவிட்டு அவளை மடிமேல் படுக்க வைத்தான். அவள் லேசாய்க் கண் திறந்து புன்முறுவல் காட்டி உடனே தூங்கிப் போனுள்.

கண்ணை மூடினுல் இமைக்குள் ரேணு வந்து சிரித்தாள்.

''எக்ஸலண்ட்...'' என்றுள் சித்ரா ஆச்சரியக் கண்களை அகலமாய் விரித்து.

''மலம்புழாவை விட பிருந்தாவன் உண்மையிலேயே அமர்க்களமாயிருக்கு...'' என்றுள் மீண்டும்.

''போன தடவை நான் வந்தப்போ இருந்ததை விட இப்போ இன்னும் நல்லாயிருக்கு...'' என்றுன் வாசு.

''ரேணு ரொம்பக் கொடுத்து வச்சவ...''

''என்ன திடீர்னு அவளைப் பத்தி...?''

''ஆமாங்க... அவளையாச்சும் நீங்க இங்கெல்லாம் கூட்டிக்கிட்டு வந்திருக்கீங்க... எங்கண்ணன் இருக்கானே... ஒரு எடத்துக்கும் கூட்டிக்கிட்டுப் போக மாட்டான். எப்பப்பாரு நண்பர்களோடதான் சுத்துவான். இப்பத்தான் நா முதல் தடவையா இந்த மாதிரில்லாம் அழகான எடம் இருக்குன்னே தெரிஞ்சுக்கிறேன்...''

வாசுவுக்குத் திடீரென மனசில் ஒரு சின்ன ஆறுதல் முளைத்தது. எல்லா அண்ணன்களும் இப்படித்தான் போலும்... அப்படியானுல் அந்தத் தங்கை ஜாதி எப்போதுமே உதாசீனப்படுத்தான் போக வேண்டுமோ? இதற்கு ஒரு முடிவே கிடையாதா?

''அம்மா...''

ரேணு கதவைத் திறக்க, ஆரத்தியோடு அம்மா நின்றுள். ரேணு வாசுவை விசித்திரமாய்ப் பார்த்தாள். அண்ணி பக்கத்தில் நிற்கிற அவன் கண்கள் தன்மேல் நிலைத்திருந்ததைப் புரியாமல் பார்த்தாள். சிடுமூஞ்சி அண்ணன் சிரித்துக் கொண்டே... எப்படி? முகத்தில் ஒரு புது மலர்ச்சியோடு இனிமையாய்ச் சிரித்துக் கொண்டு அவன் நின்ற தோரணை புதிதாய் இருந்தது. அந்தக் கனிவான பார்வை புதிராய் இருந்தது. அம்மா —ஆரத்தி சுற்றுகையில் எட்டி அவள் தோளில் தட்டி அவன் மெல்லச் சிரித்தான்.

''ரேணும்மா... உனக்குச் சீக்கிரமே கல்யாணம் பண்ணிடலாம்னு இருக்கேன்...''

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!





நைஸில்
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர்.




2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'

***வாங்குவீர் நைஸில். விரட்டுவீர் வியர்க்குருவை. பால்கம் பவுடரைவிட குறைந்த விலையில்!***



மருந்துக் கலவை யுள்ள நைஸில்:

1. அதிக வியர்வை யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற் படுத்தும் கிருமி களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத மளிக்கிறது.

GN-79-PR-TH

# இந்து மத தர்மமே மகாத்மாவின் ஹரிஜன சேவையின் அடிப்படை

ஆ. கணேசன்



300 ரூபாய் முதல் பரிசு பெற்ற கட்டுரை

**கா**ந்தியடிகளின் சமய உணர்வுக்கும் இறை நம்பிக்கைக்கும் அடிப்படையாக அமைந்தது, அவர் இந்துமதத் தத்துவங்களின் மேல் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டது தான். இந்துமதத்தின் அடிப்படை உணர்வுகளை மதித்துத் தாம் ஒரு முழுமையான இந்துவாக இருப்பதையே பெருமையாகக் கொண்டார். இந்துமதத்தின் மேல் கொண்ட அசையாத நம்பிக்கையே காந்தியடிகளின் தீண்டாமை ஒழிப்புக்கு அடிப்படையாக அமைந்தது. ஹரிஜன முன்னேற்றமே இந்து மத வளர்ச்சிக்கும், சுயராஜ்யத்துக்கும் உகந்தது என அவர் கருதினார். எனவே தான் தீண்டாமை ஒழிப்பில் தம் வாழ்நாளில் பெரும் பகுதியைச் செலவிட்டார். தீண்டாமையே இந்துமத முன்னேற்றத்துக்கு முட்டுக் கட்டையாக இருக்கிறதென்பதை உணர்ந்து தீண்டாமை ஒழிப்புக்கு, இந்துமத வளர்ச்சிக்கு ஹரிஜன முன்னேற்றத்தினை ஒரு கருவியாகக் கொண்டார்.

## காந்திஜியின் சமய வாழ்க்கை

**ம**காத்மாவின் இளமைப் பருவ நிகழ்ச்சிகள் மட்டுமின்றி இளமையில் அவர் பழகியவர்களும் சமய நம்பிக்கைக்குத் தூண்டுகோலாக இருந்தனர். காந்திஜியின் குடும்பமே அடிப்படையில் சமய நம்பிக்கை உள்ள குடும்பமாகும். அவர்கள் காந்தியடிகளுக்கு இளமையிலேயே சமய உணர்வு தோன்ற அடித்தளம் அமைத்துக் கொடுத்தார்கள். மேலும் தம் வாழ்நாளில் சந்தித்த பல பெரிய மனிதர்கள், கேட்ட சொற்பொழிவுகள் படித்த நூல்கள் பலவும் சமயத்தைப் பற்றி அறிந்து கொள்ள உறுதுணையாக விளங்கின என்று காந்தியடிகள் கூறினார். இந்துமதம், கிறிஸ்துவம், இஸ்லாம் போன்ற பல மத உண்மைகளை அறிந்திருந்தாலும் அடிப்படையில் ஒரு இந்துவாகவே விளங்கினார். இதனைப் பற்றி மகாத்மாவே, "எல்லா மதங்களுக்கும் அடிப்படையான மதத்தைப் பற்றியே எண்ணுகிறேன்" என்று சொன்ன போதிலும் வெளிப் படையாகவே "என்னை ஒரு ஹிந்து – சநாதனி என்று சொல்லிக் கொள்ளத் தயங்கவில்லை" என்றும் கூறுகிறார்.

இளமையிலேயே எவ்வாறு சுயநம்பிக்கை உடையவராகத் திகழ்ந்தாரோ, அதனைப் போலவே தீண்டாமை ஒழிப்பிலும் தீவிரமாக இருந்தார். காந்திஜி, பன்னிரண்டு வயதிலே உகா என்னும் தோட்டியைத் தொடக் கூடாது என்று பெற்றோர்கள் கூறியபோது அதற்கு எதிர்ப்புத் தெரிவித்து உகாவைத் தீண்டுவது பாவம் என்று நினைப்பது தவறானது என்று தாயாரிடம் வாதிட்டு வெற்றி பெற்றார். காந்திஜியின் சமய நம்பிக்கையும் தீண்டாமை ஒழிப்பும் நாணயத்தின் இரு பக்கங்களாக ஒன்றை விட்டு ஒன்று பிரிக்க இயலாதவாறு அமைந்தன.

## இந்து மதத் தத்துவம்

**கா**ந்தியடிகள் பல சமயங்களின் மீது நம்பிக்கை கொண்டிருப்பினும், அவரது தத்துவத்துக்கு அடிப்படையாக இந்து மதத்தையே கொண்டிருந்தார். காந்தியடிகளின் இறை நம்பிக்கையும், சமய உணர்வும் இந்து மதத்தின் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டே எழுந்தன. இந்து மதத்தினைப் பற்றிக் காந்தியடிகள் கூறும்போது "ஹிந்து சமயத்தில் இரண்டு அம்சங்கள் இருக்கின்றன. ஒருபுறம் சரித்திர பூர்வமான ஹிந்து சமயம் இருக்கிறது. அதில் தீண்டாமை, கற்களையும், மரங்களையும் வணங்கும் மூட பக்தி, மிருக பலி போன்ற பல விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. மற்றொரு புறம் கீதையும், உபநிடதங்களும் பதஞ்சலியின் யோக சூத்திரங்களும் காட்டும் ஹிந்து சமயம் இருக்கிறது. இந்த ஹிந்து சமயம்தான் அஹிம்சையின் சிகரமாகத் திகழ்வது" என்று கூறுகிறார்.

இந்து மதத்தில் உள்ள தீண்டாமை உணர்வினை இந்து மதப் பற்றின் காரணமாக வன்மையாகக் கண்டித்தார். இந்து மத முன்னேற்றத்தின் முட்டுக்கட்டையாகத் தீண்டாமை இருக்கிறது என்பதை உணர்ந்து செயல்பட்டார். இந்து மதத்தின் உண்மையான கோட்பாடுகளை ஏற்றுக் கொண்டு மத நம்பிக்கையை வளர்த்தார். தூய்மையான இந்து மதத்தின் தொன்மையும், பெருமையும் காந்தியடிகள் மேன்மேலும் சமயத்தின் மேல் நம்பிக்கை பெற உதவின. இந்து மதத்தின் மேல் கொண்ட ஆழமான, நம்பிக்கையே, சமூக சீர்திருத்தத்துக்கு அடிப்படையாக அமைந்தது. இதனை "ஹிந்து சமயம் சீர்திருத்தக்காரர்கள் அடங்கிய ஒரு திருக்கூட்டத்தையே உற்பத்தி செய்திருக்கிறது. தப்பெண்ணங்கள் மூட நம்பிக்கைகள், துஷ்பிரயோகங்கள் முதலியவற்றை அவர்கள் வெற்றிகரமாக எதிர்த்து நின்றிருக்கிறார்கள்" என்று காந்தியடிகள் கூறுவதிலிருந்து அறியலாம்.

## ஹரிஜனங்கள் – யார்?

**கா**ந்தியடிகளின் சர்வோதயத் தத்துவத்தின் அடிப்படையாக அவர் அளித்த

நிர்மாணத் திட்டம் விளங்குகிறது. அப்பதினெட்டுப் பணிகளில் ஒன்று தீண்டாமை ஒழிப்பு ஆகும். சமுதாயத்தில் உரிமை பறிக்கப்பட்டு, ஒதுக்கி வைக்கப்பட்டு ஒதுங்கி வாழும் தாழ்த்தப்பட்ட மக்களின் உரிமைக்காகப் போர்க் குரல் எழுப்பிய பெருமை காந்தியடிகளைச் சாரும்.

தீண்டத் தகாதவர்கள் என்று சமுதாயத் தினரால் புறக்கணிக்கப்பட்டு வாழ்ந்து வரும் மக்களைச் சகோதரர்களாக எண்ணி, அவர்கள் முன்னேறப் பல இயக்கங்களை நடத்தினார், காந்தியடிகள். தீண்டாதவர் என்று அழைப்பதை மறுத்து ஹரிஜன்—இறைவனின் மனிதன் — என்ற பொருளில் அழைத்தார். தீண்டத் தகாதவர்களுக்காக உழைத்தால்தான் நாம் உண்மையான கடவுளின் குழந்தைகள் என்பது காந்திஜியின் கருத்து. ''நம்முடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது தீண்டாதார் உண்மையில் ஹரிஜனே. அதாவது கடவுளின் மனிதரே யாவர். நாம் தீயவர் ஆவோம். ஏனெனில் தீண்டாதார் நாம் சுத்தமாகவும், சுக போகத்துடனும் வாழ வேண்டும் என்பதற்காகச் சேற்றிலும் சகதியிலும் உழைத்திருக்கிறார்கள்'' என்று கூறினார்.

காந்தியடிகள் தீண்டாமையினை எதிர்த்துத் தொடுத்த போரில் ஹரிஜன முன்னேற்றத்தை முதன்மையாகக் கொண்டார். இந்து மதத் தத்துவங்களும், சமுதாய ஒற்றுமையும் ஹரிஜனங்களின் மேன்மைக்காக உழைக்கத் தூண்டியது.

''உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற எண்ணம் தருமம் ஒழுக்கம் இவற்றின் அடிப்படையான விதிகளுக்கு முற்றிலும் முரணாகும்'' என்று தரும அடிப்படையில் தம் சீர்திருத்தத்தை அமைத்துக் கொண்டார்.



### தீண்டாமை ஒழிப்பும் இந்து மதமும்

இந்து மதத்தின் பெயரால் சாதிப் பிரிவினைகள், தீண்டாமை உணர்வு, பெண்ணடிமை போன்றவை நிலவி வந்ததைக் காந்தியடிகள் கண்ணுற்றார். இந்து மதவளர்ச்சிக்குப் பாடுபட வேண்டும் என்ற எண்ணத்தில் அதில் களை மண்டிக் கிடந்த போலி வாதங்களை உடைத்தெறிந்தார். அதில் ஒன்று தான் தீண்டாமை ஒழிப்பு. சமுதாயத்தில் தீண்டத் தகாதவர்கள் என்று சிலரை ஒதுக்குவோரை மகாத்மா உண்மையான இந்து என்று ஏற்றுக்கொள்ளவே இல்லை. உண்மையான இந்து என்பவன் தீண்டாமை ஒழிப்புக்குப் பாடுபட வேண்டும் என்று எண்ணி அறைகூவல் விடுத்தார்.

தீண்டாமை இந்து மதத்தை அழித்துவிடும் என்று எண்ணினார். இதனைக் காந்தியடிகள், ''தீண்டாமை ஹிந்து மதத்தை அழித்துவிடக் கூடியது. இந்தச் சாபக்கேட்டை நாம் கட்டியழுது கொண்டிருப்போமாயின், மானிடவர்க்கம் நம்மைப் பார்த்து எள்ளி நகையாடும். தீண்டாமைக்கு ஆக்கம் அளிக்கும் மதம், உலகத்தில் கண்டனத்துக்கு ஆளாகியே தீரும்'' என்று விளக்குகிறார்.

இந்து மதத்தினைப் பற்றிக் கூறும் சாஸ்திரங்களிலும், நூல்களிலும் தீண்டாமை பற்றிச் சான்றுகளே இல்லை என

[illegible]

(இந்த விமர்சனத்தை ஒரு கண்ணாடி முன் வைத்துப் படிக்கவும்)

[illegible]

வாதிடுகிறார். இந்து மதத்தின் அடிப்படையில் தீண்டாமை என்பது இல்லவே இல்லை என்று கூறும் காந்தியடிகள், ''உலகமே என்னை எதிர்த்து நின்றால் கூட தீண்டாமை ஹிந்து மதத்தின் ஓர் அம்சம் என்று அவர்கள் கருதுவது தவறு என்பதை நான் கூரை உச்சியிலிருந்து பிரகடனம் செய்வேன்'' என்று கூறுகிறார்.

காந்தியடிகளின் எண்ணங்கள் சமய நம்பிக்கையின் அடிப்படையில் வளர்ந்தவை. சமய நம்பிக்கையும் சமுதாய சீர்திருத்த நோக்கமும் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்து மகாத்மாவைச் செயல் புரியத் தூண்டின.

**உயர் நோக்கம்**

காந்தியடிகள் மதத்தின் பெயரால் மக்கள் பிரிந்திருப்பதை வெறுத்தார். உண்மையான இந்து மத நம்பிக்கை உடையவர்கள், எல்லோரும் சமம் என்று எண்ண வேண்டியதை வலியுறுத்தினார். ''தீண்டாமை தங்கள் மதத்தின் ஓர் அம்சமென்று இந்துக்கள் வேண்டுமென்று பிடிவாதமாகக் கருதும் வரையில் தங்கள் சகோதரர்களான ஒரு பகுதியினரைத் தொடுவது பாவமென்று இந்துக்கள் பெரும்பாலோர் எண்ணும்வரையில் சுயராஜ்யம் பெறுவது அசாத்தியமான காரியம்'' என்று அறிவுறுத்தினார். இந்து மத வளர்ச்சியில் பெரும் அக்கறை கொண்ட காந்தியடிகள் அதில் மறைந்து கிடக்கும் தூசுகளை அகற்றிப் பொலிவடையச் செய்ய விரும்பினார். உயர்ந்த எண்ணமும், சமுதாயப் பிரதிபலிப்பும் கொண்ட மகாத்மா தீண்டாமை ஒழிப்பை ஒரு விரதமாக ஏற்றுக்கொண்டார்.

''பிறப்பு காரணமாக ஒரு சகோதரரை நாம் சாதிப் பிரஷ்டராக நடத்தும் வரையில் நாம் சுயராஜ்யம் பெறக் கடவுள் விடமாட்டார்'' என்று கூறும் காந்தியடிகளின் வாக்கு இன்னும் நாம் சுயராஜ்யம் பெற்றுவிட்டோமா என்று நம்மை நாமே கேட்கத் தூண்டுகிறது.

---

## மீட்டுகிறார்கள்

விடை

1. சந்திரபாபு (புதையல்)
2. டி. ஆர். மகாலிங்கம் (லைலாமஜ்னு)
3. எம். வி. ராஜம்மா (தாய்பிள்ளை)
4. கே. ஆர். விஜயா (அக்கா)
5. ஸ்ரீவித்யா (துர்காதேவி)
6. ஸ்ரீதேவி (ஜானி)
7. விஜய்பாபு - சத்யகலா (முயலுக்கு மூணுகால்)
8. மஞ்சுபார்கவி (சங்கராபரணம்)
9. கமலதா (திசை மாறிய பறவைகள்)

---

ஸ்தாபிதம் : 1942 போன் : 123

# லலிதா பார்மஸி

**கும்பகோணம்**

DRUG LICENCE No. 40 / 78

மத்திய அரசால் ஈட்டுத் தொகைக்கு அனுமதியளிக்கப்பட்டுள்ளது

எமது விசேஷத் தயாரிப்புகள் :

1. யௌவன ரசாயனம்
2. அச்வகந்தி ரசாயனம்
3. பூர்ண சந்திரோதயம்
4. ஸ்வர்ண மாலிக வசந்தம்

**மிகச் சிறந்த டானிக்**

கீழ்க்கண்ட எமது பிராஞ்சுகளிலும் கிடைக்கும்

1. லலிதா பார்மஸி, 52, மஹாதானத் தெரு, மாயூரம், போன் : 379
2. லலிதா பார்மஸி, 81, வடக்கு ரத வீதி, சிதம்பரம்
3. லலிதா பார்மஸி, 6, ரெங்கநாதன் தெரு, தியாகராய நகர், சென்னை - 600 017, போன் : 441454
4. லலிதா பார்மஸி, 60-B, கச்சேரி ரோடு, மயிலாப்பூர், சென்னை - 600 004, போன் : 73007

மற்றும் சிறந்த ஆயுர்வேத மருந்துகள் யாவும் கிடைக்கும்

---

# Dr. சாமிகிரி சித்தர்

## காது கேளாதவர்களைக் காது கேட்கச் செய்கிறார்



**காது கேளாதவர்களே! வாருங்கள்...**

★ உங்கள் நலனில் அக்கறை கொண்டோருடன் வாருங்கள். 3 நாள் — 6 வேளை சித்த வைத்திய சிகிச்சை பெறுங்கள்.

★ சந்தேகமில்லாத சந்தோஷத்தோடு காது கேட்டுச் செல்லுங்கள்.

★ காதுக் கருவி உபயோகித்தவர்களுக்கும், ஊமைத் தன்மை உள்ளவர்களுக்கும் சிகிச்சை அளிப்பதில்லை.

★ அறுவைச் சிகிச்சை செய்தும் குணமாகாதவர்களுக்கும் சிகிச்சை அளிக்கப்படும்.

★ இயற்கை சிகிச்சை இது. என்றும் பலன் அளிக்கும்.

காதுகளை பரிசோதித்த பிறகே சிகிச்சைக்கு ஏற்கப்படுவர். (ஞாயிற்றுக்கிழமை விடுமுறை)

விவரங்களுக்கு :

**Dr. சாமிகிரி சித்தர் காதொலி நிலையம்**

**97, சரோஜினி ரோடு, ராம் நகர், கோயமுத்தூர்-641009**

இந்திரா பார்த்தசாரதி

# வெந்து தணிந்த காடுகள்

## 13

விம்மி உறுதியான குரலில் ''இனிமே இதைப் பத்திப் பேசறதிலே எந்தப் பிரயோசனமும் இருக்கிறதா எனக்குத் தெரியலே... நான் உங்களோட வரப்போறதில்லே....'' என்றாள்.

''நீங்க என்ன சொல்றீங்க தாமோதரன்?''

''நான் என்ன சொல்றதுக்கு இருக்கு? இது உங்க ரெண்டு பேருக்கும் உள்ளபிரச்னை'' என்றான் தாமோதரன்.

''பட் அவ வீட்டை விட்டு வந்து உங்களோட இருக்காளே, 'யு ஆர் ஆல்ஸோ இன்வால்வ்ட்...' இது எப்படி எங்க ரெண்டு பேருக்குமுள்ள பிரச்னை?''

''இது ஒரு ஓபன் ஹவுஸ். யார் வேணுமானாலும் வரலாம்... நீங்களே விம்மியை விட்டு வந்திருந்தாலும் இடம் கொடுத்திருப்பேன்....''

''ஷெல்டர் ஃபார் ரன்-அவே வொய்ஃப்ஸ் அன்ட் ஹஸ்பென்ட்ஸ்?''

''நான் உங்களை விட்டு ஓடிவரலே, மிஸ்டர் அருண். நீங்கதான் என்னை வீட்டை விட்டுப் போகச் சொன்னீங்க.''

''எப்போ சொன்னேன்?... நீ என்னை 'கெட்-அவுட்' சொன்னே, அப்போ கோபத்திலே நானும் சொன்னேன்...ஓ. கே. எல்லாத்தையும் ஒரு கெட்ட சொப்பனம் மாதிரி மறந்துடுவோம்... ப்ளீஸ் கம் வித் மீ!''

''நான் உங்களோட இருந்ததை ஒரு கெட்ட சொப்பனம் மாதிரி நினைச்சுண்டு எல்லாத்தியும் மறந்திடுங்க... ஐ ஆம் நாட் கமிங் வித் யு....''

அருண் சிறிது நேரம் பேசாமல் நின்று கொண்டிருந்தான். அவன் தாமோதரனைப் பார்த்தான்.

தாமோதரன் கீழே உட்கார்ந்து விட்டான். அவன் கையிலிருந்த புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தான்.

''நீ என்னை விரும்பினதா நினைச்சதெல்லாம் வெறும் பொய்தானா?'' என்று கேட்டான் அருண், மிகவும் நிதானமான குரலில்.

''நீங்க அப்படி நினைச்சிண்டிருந்தா அதுக்கு நான் பொறுப்பில்லே... இப்போத்தான் அதைப் பத்தி யோசிச்சுப் பார்த்தேன்... நீங்க ராதிகாவோட இருந்ததைப் பத்திச் சொன்னபோது, உங்க பேரிலே எனக்கு விருப்பம் இருந்திருந்தா, எனக்குப் பொறாமை ஏற்பட்டிருக்கணும். ஏற்படலே. ஏன்? நீங்க என்னை விரும்பின அளவுக்கு, நான் உங்களை விரும்பலே, மிஸ்டர் அருண். நான் பொய் சொல்லல்லே. இப்போத்தான் மிஸ்டர் தாமோதரன் சொன்னார், இந்த இடத்திலே அவரோட இருக்கணும்னா, பொய் பேசக் கூடாதுன்னு...''

அருண் அவள் பேசப் பேசப் பொறுமையை இழந்து வருகிறான் என்று அவனைப் பார்த்தால் தெரிந்தது.

அவன் கோபத்தில் உதடுகள் துடிக்கக் கேட்டான்: ''டெல் மி ஹானஸ்ட்லி, விம்மி, ஆர் யூ இன் லவ் வித் திஸ் கிரீச்சர்?''

''கெட்-அவுட்'' என்று இரண்டாம் முறையாக, ஆவேசம் வந்தவள் போல் கத்தினாள் விம்மி.

தாமோதரன் புத்தகத்தை மூடிவைத்து விட்டு, அருணைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

• • •

அருண், 'இண்டர் நேஷனல் செண்டருக்குள் நுழைந்தான். லவுஞ்சுக்கு ராதிகாவை அங்கு சந்திப்பதாக ஏற்பாடு. ஆபீஸ் விஷயமாக அவன் 'லோதி எஸ்டேட்'டில் ஒரு முக்கிய அரசாங்கப் புள்ளியை அவர் வீட்டில் சந்தித்துவிட்டு, செண்டருக்கு வருவதாகக் கூறியிருந்தான்.

அருண் ஒரு மணிக்கு வருவதாகக் கூறியிருந்தான். அரை மணிதாமதமாகிவிட்டது. ராதிகா காத்திருந்துவிட்டுப் போயிருக்கக் கூடும்.

அவன் லௌஞ்சுக்குள் சென்று சுற்றுமுற்றும் பார்த்தான். ராதிகாவைக் காணவில்லை.

ஒருவேளை அவள் இன்னும் வரவில்லையோ? யாரைப் பார்க்கச் சென்றாளோ அவர் வீட்டில் தாமதமாகியிருந்தாள்!

அவன் வெளியே வந்து அந்த நீண்ட வராந்தாவில் போடப்பட்டிருந்த கூடை நாற்காலியில் உட்கார்ந்து ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான்.

இங்கு அவன் விம்மியுடன் எத்தனை தடவைகள் வந்திருக்கிறான்! விம்மி இப்பொழுது மிகவும் பிரபலமாகி விட்டாள். தில்லியில் உள்ள பெரிய ஓவியர்களில் அவளும் ஒருத்தி.

அவனை விட்டு அவள் பிரிந்து ஆறு வருஷங்கள் ஆகிவிட்டன. இந்த ஆறு வருஷங்களுக்குள் எத்தனை மாறுதல்கள்! அவன் அவனுடைய கம்பெனியில் முதல் பதவியை வகிக்கிறான். ராதிகா அவனுடன், அவன் வீட்டில் இருப்பது என்று தீர்மானம் ஆனவுடன் அவளுடைய கம்பெனியில் வேலையை ராஜிநாமா செய்துவிட்டு, வேறொரு கம்பெனியில் சேர்ந்தாள். பள்ளிப் படிப்பை முடித்த பிறகு தில்லியிலேயே ஒரு கல்லூரியில் சேர்ந்த ராகுல், ஹாஸ்டலில் இருக்கிறான். வீட்டுக்கு வருவதே கிடையாது. ராதிகாதான் அவனைச் சென்று பார்க்கிறாள்.

ராகுலைப் பற்றி அவன் அவளுடன் பேசுவதே கிடையாது. ராகுல் தன்னை அடியோடு வெறுப்பதுதான் இதற்குக் காரணமாக இருக்க வேண்டும் என்று தோன்றிற்று அருணுக்கு. இதைப் பற்றியும் அவன் ஒரு சமயம் ராதிகாவை விசாரித்தான். 'ராகுல் யாரைப் பற்றியும் கவலைப் படுவதில்லை.... அம்மாவிடம் பாசம் உள்ள பையனுக்குத்தானே அம்மாவின் காதலனிடம் பொறாமை ஏற்படும்... யு டோன்ட் ஃபிகர்இன் ஹிஸ் லைஃப் அட் ஆல்...'' என்று ராதிகா பதில் சொன்னாள். இது முழு உண்மையாக அவனுக்குப் படவில்லை. இது உண்மையாக இருந்தால், ராகுலுக்கு அவனை வந்து பார்ப்பதில் ஆட்சேபனை இருந்திருக்காது.

ராதிகாவின் போக்கிலும் அவன் சிற்சில மாறுதல்களைக் கவனிக்கத் தவறவில்லை. அவள் இப்பொழுதெல்லாம் நிறையக் குடிக்கத் தொடங்கி விட்டாள். அவன் ஓரிரு சமயங்களில் இதைச் சுட்டிக் காட்டியபோது அவள் சொன்னாள்: ''என்னைப் பற்றி எனக்குத் தான் அக்கறை இருக்க வேண்டும். நீங்கள் கவலைப்பட வேண்டாம். உங்களுக்குப் பிடிக்காவிட்டால், நான் உங்கள் வீட்டை விட்டுப் போய்விடுகிறேன்.''

அவன் ராதிகாவுடன் வழக்காடுவதில்லை. அவளைப் பற்றி நன்கு அறிந்துள்ள நிலையில் தான் அவளுடன் இருக்கிறான்; அவள் தன்னுடன் வந்து இருக்கச் சம்மதிப்பாள் என்று முதலில் அவன் நினைக்கவில்லை. தாமோதரன் வீட்டிலிருந்து அவன் அன்று புறப்பட்டவுடன் நேரே ராதிகாவின் வீட்டுக்குச் சென்றான். அவளிடம் அவனுக்கும் விம்மிக்கும் இடையே நிகழ்ந்த சம்பாஷணையைப் பற்றிச் சொன்னான். பிறகு உணர்ச்சி வயப்பட்ட நிலையில், ராதிகாவைத் தன்னுடன் வந்து இருக்கும்படி அழைத்தான். அவள் இதற்கு இசைந்தது, அவன் இதைப் பற்றி அடுத்த நாள் யோசித்துப் பார்த்தபோதுதான், ஆச்சரியத்தைத் தந்தது. அவளுக்கும் 'தனிமை' 'போரடி'த்திருக்க வேண்டுமென்று அவனுக்குப் பட்டது.

அவனுடன் அவள் இருக்க ஆரம்பித்த சில மாதங்களுக்குப் பிறகு, அவன் இருவரும் திருமணம் செய்து கொள்வதைப் பற்றிக் கேட்டான். 'விம்மி விவாகரத்துக்கு ஒப்புக் கொண்டு விடுவாள்... ரமேஷ் இருக்குமிடமோ தெரியவில்லை. இந்தப் பிரச்னையைச் சட்ட பூர்வமாக அணுகி...' அவன் இவ்வாறு சொல்லி முடிப்பதற்குள் அவள் பெரிதாகச் சிரித்துக் கொண்டே கூறினாள்: 'மை டியர் அருண், யு ஆர் இம்பாஸிபிள்...' மறுபடியும் கல்யாணத்தைப் பற்றி அவளிடம் அவன் பேசவேயில்லை. பேசுவதிலும் பயனில்லை என்று அவனுக்குத் தோன்றியது.

விம்மிக்கும் தாமோதரனுக்குமிடையே எத்தகைய உறவு இருக்க முடியும்? இந்தக் கேள்வியைக் கேட்டதற்காகத்தான் விம்மி, அவனுடன் உறவை முறித்துக் கொண்டு





மேலட்டைக்கு மெருகூட்டுபவர் குமாரி ரேணுசந்திரா. திருவனந்தபுரம் கல்லூரி ஒன்றில் பி. ஏ. மாணவி. ஆனால் அவர் தந்தை திரு சந்திரசேகரன் நடத்தும் நடனக் குழுவில் இவர் ஆசிரியை. கேரள நாட்டிற்கே உரித்தான நடனங்கள் மட்டுமின்றி அனைத்து நடனங்களும் இவருக்கு 'கால்' வந்த கலை. 'கை' வந்த கலையும் கூட;
குறிப்பாக 'குச்சுப் பிடி' இவருக்கு அத்துப்படி. கலை ஆர்வம் காரணமாக ஒன்றிரண்டு மலையாளப் படங்களில் தலை காட்டியிருக்கும் இவரின் பேராசை- நடனக் கலைக்கே எடுத்துக் காட்டாகத் தான் திகழ வேண்டுமென்பதே.

பேட்டி : யெம்ஜி
வண்ணப் புகைப்படம் : மேகலா

விட்டாள். தாமோதரன் மிகச் சிறந்த ஓவியனாக இருக்கலாம். அறிவாளியாக இருக்கலாம். ஆனால் அவன் உருவத்தைப் பார்க்கும்போது எந்தப் பெண்ணுக்கு அவன் மீது காதல் உண்டாகும்? அவன் உருவத்தை மனத்தினின்றும் அகற்றி அவனுடன் பேசுவதென்பது சாத்தியமான காரியமா?

ராதிகாவிடம் தாமோதரனைச் சித்திரித்துக் கூறிவிட்டு, விம்மிக்கும் அவனுக்குமிடையே உள்ள தொடர்பை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை என்று சொன்னபோது அவள் இதைப் பற்றி யோசிப்பது போல் சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். பிறகு சொன்னாள்: 'யாரிடம் யாருக்கு ஈடுபாடு ஏற்படுகிறது என்ற மனித குணத்தைப் பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை.'

சில மாதங்களுக்கு முன்பு தாமோதரனைப் பற்றி ஒரு பத்திரிகையில் ஒரு கட்டுரையும், அவன் பேட்டியும் பிரசுரமாகியிருந்தன. அவன் ஒரு தனிமனிதனல்ல, ஓர் இயக்கம் என்று குறிப்பிட்டிருந்தார்கள். கலைத் துறையில் ஈடுபட்ட பல இளைஞர்கள் அவன் தலைமையை ஏற்றுக் கொண்டு எப்படிச்செயல் படுகிறார்கள் என்பது பற்றியும் விரிவாக எழுதியிருந்தார்கள். சிலர் கவிஞர்கள், சிலர் விமர்சகர்கள், சிலர் நாடகத் துறையில் இருப்பவர்கள், சிலர் சைத்ரிகர்கள்... எப்படி ஒரு கலைக் குடும்பத்தை உருவாக்கி தாமோதரன் நிர்வகித்து வருகிறான் என்று படித்தபோது விம்மியின் பெயர் அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறதா என்று அவன் அக்கட்டுரை முழுவதையும் படித்துப் பார்த்தான். தாமோதரன் பேட்டியில் கூறியிருந்தான். 'கலை ஆற்றல் வெளிப்படுவதற்கு ஒருவருக்கு வாழ்க்கையில் பொறுக்க முடியாத சலிப்பு ஏற்பட வேண்டும். ரீப் வான் விங்கிலைப் போல் உறங்கிக் கிடந்த விம்மியின் ஓவியத் திறன் சிலிர்த்தெழுந்ததென்றால், அதற்கு அவளுடைய திருமண வாழ்க்கையின் சலிப்பே காரணம்....'

விம்மியின் தகவல்தான் அவனை இவ்வாறு சொல்லத் தூண்டியிருக்க வேண்டும். அவனுடன் இருந்த நாட்கள் விம்மிக்குச் சலிப்பையா தந்தன? குழந்தை பிறக்கவில்லை என்ற காரணத்தினால் இருக்குமோ? ஆனால் இதைப் பற்றி அவள் வாய் விட்டுக் கூறியதே கிடையாது. குழந்தை பிறக்காததற்கு அவன் அவளை டாக்டரிடம் பரிசோதனைக்கு அழைத்துச் சென்றானே தவிர, தன்னைப் பரிசோதித்துக் கொள்ளவில்லை. தன்னைப் பற்றி அவனுக்கு அவ்வளவு அசாத்திய நம்பிக்கை. இந்தச் சின்னச் சின்ன விஷயங்களெல்லாம் அவளை மிகவும் உறுத்தியிருக்க வேண்டும் என்று இப்பொழுதுதான் புரிகிறது... குழந்தை பிறந்திருந்தால் ஒருவேளை விம்மி அவனை விட்டுப் போயிருக்க மாட்டாளோ என்னவோ!

இப்பொழுது வாழ்க்கை அவனுக்கு அலுத்துக் கொண்டிருக்கிறது. வாழ்க்கையில் அவன் வெற்றியடைந்த மனிதன்தான் சந்தேகமில்லை. அவனுடைய கம்பெனியில் அவன் தான் முதல்வன். இது வெற்றி இல்லையா? ஆனால் வாழ்க்கை என்பது வெறும் லாப நஷ்டக் கணக்குத்தானா? இதுதான் அவனுக்குப் புரியவில்லை.

இந்த அலுப்பின் காரணமாக அவனுக்குள்ளிருக்கும் கலை ஆற்றல் வெளிப்பட இடமிருக்கிறதா? அவனுக்குள் கலை ஆற்றல் இருந்தால்தானே வெளிப்படுவதற்கு? அவனுக்கு இலக்கியம், இசை, ஓவியம்... எதிலுமே ஈடுபாடு இருப்பதாகத் தெரியவில்லை. வாழ்க்கையில் எவ்வளவு இழந்திருக்கிறோமென்று அவனுக்கு அப்பொழுதுதான் முதல் தடவையாகப் புலப்பட்டது.

"ஹல்லோ அருண்..."

அவன் திரும்பிப் பார்த்தான். சுரேஷ்— ஒரு பெரிய தொழில் நிறுவனத்தின் 'லையாசன்' அதிகாரி. அவன் இன்டர் நாஷனல் சென்டரிலேயே தங்கி யிருந்தான். மத்திய அரசாங்கத்தின் மந்திரி ஒருவரின் உறவினன். இந்த உறவை வைத்துக் கொண்டு அவன், சம்பாதித்த லாபங்கள் எத்தனை! பெண்களும், வாய் ஜாலமுமே அவன் வெற்றிக்கு மூலதனம்.

சுரேஷ் அருண் எதிரே இன்னொரு கூடை நாற்காலியில் உட்கார்ந்தான்.

"என்ன இப்படிச் சாவகாசமாக உட்கார்ந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டான் சுரேஷ்.

''சும்மாத்தான்....''

''தேர்தலில் எந்தக் கட்சி பதவிக்கு வரும் என்று நினைக்கிறீர்கள்?''

''எந்தக் கட்சி வந்தால் என்ன?''

''எந்தக் கட்சியாக இருந்தாலும் வளைத்துப் போட்டுக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையா?'' என்று கேட்டுக் கொண்டே சிகரெட் பாக்கெட்டை அருணிடம் நீட்டினான் சுரேஷ்.

''நம்பிக்கையின் காரணமாகத்தானே நாம் எல்லோரும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்?'' என்று கூறியவாறு ஒரு சிகரெட்டை எடுத்துக் கொண்டான் அருண்.

''இன்றிரவு வருங்கால எம். பி.க்கள் நாலைந்து பேர் என் எளிய குடிலுக்கு விருந்துண்ண வருகிறார்கள்... எல்லாம் உண்டு... வருகிறீர்களா?'' என்று கண் சிமிட்டிக் கொண்டே அவனை அழைத்தான் சுரேஷ்.

''தாங்க்யு. நான் வருவதற்கில்லை. என் ஜாய் யுவர்செல்ஃப்...''

''இந்த வருங்கால எம்.பி.க்களைத் தெரிந்து கொள்வது உங்களுக்கும் உபயோகமாக இருக்கலாம்... இவர்களில் ஒருவர் நிச்சயமாக மந்திரியாக வரப்போகிறார்.''

''எந்தக் கட்சி பதவிக்கு வந்தாலுமா?''

''ஆமாம்'' என்று கூறிவிட்டுப் பெரிதாகச் சிரித்தான் சுரேஷ்.

''இன்று விருந்துக்கு வரவேண்டுமென்று என்ன அவசியம்? பின்னால் எங்களுக்கு உதவி செய்ய வேண்டுமானால் மறுக்கவா போகிறீர்கள்? இன்றிரவு வேறு வேலை இருக்கிறது. அதனால்தான் யோசிக்கிறேன்.''

''ஆஃப் கோர்ஸ், ஐ ஆம் அட் யுவர் டிஸ்போஸல்... அரபு நாடுகள் காண்ட்ராக்ட் ஃபைனலைஸ் செய்து விட்டார்களாமே?''

''ஆ...மா...ம்... உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''சுரேஷுக்குத் தெரியாமல் அரசாங்கக் காரியாலயங்களில் எது நடக்கும்?''

''உங்களுடைய முக்கியத்துவம் எனக்குத் தெரியாமலில்லை. ஆனால் உங்களுடைய திறமையெல்லாம் ஏற்கனவே மிகப் பெரிதாக இருக்கும் தொழில் நிறுவனத்துக்கு உபயோகப்பட்டுக் கொண்டிருக்கிறதே என்பதுதான் என் வருத்தம். எங்கள் வளர்ச்சிக்கு நீங்கள் ஏன் உதவக் கூடாது?''

''பெரிய தொழில் நிறுவனத்துக்காக வேலை செய்கிறேன் என்பதும் உங்கள் வளர்ச்சிக்கு உதவுவதென்பதும் ஒன்றும் முரண்பட்ட விஷயங்கள் அல்ல... இது என் வளர்ச்சிக்கு நீங்கள் எந்த அளவுக்கு உதவுவீர்கள் என்பதைப் பொறுத்த விஷயம்...''

''நீங்கள் உதவ இசைந்தால் இது உங்கள் விருப்பத்தின் எல்லையைப்பொறுத்த விஷயம். இப்பொழுது எங்களுக்கு ஒரு பிரச்னை...''

''சொல்லுங்கள்.''

''ஆப்பிரிக்க நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் விவகாரம். அரசாங்கம் முதலாளி ஆகப் பார்க்கிறது. 'ஏஜென்ஸி' எங்களுக்குக் கிடைக்க வேண்டும். மனச் சாட்சி இருப்பதாகச் சொல்லிக் கொள்ளும் ஒரு முக்கிய அதிகாரி தகராறு செய்கிறார்.''

''ஓ.கே... இட் ஈஸ் டன்... கவலைப்படாதீர்கள். நானை இரவு என் சிறு குடிலுக்கு வந்தீர்களானால் இதைப் பற்றி இன்னும் விரிவாகப் பேசலாம்.''

''நாளை இரவா?....'' என்று சிறிது நேரம் யோசித்து விட்டுப் பிறகு ''சரி... ஆனால் ஒரு சிறிய மாற்றம். நீங்கள் என் வீட்டுக்கு வாருங்களேன்'' என்றான்.

''ஓ.கே....'' என்று சொல்லிக்கொண்டே அருண் கூப்பிடப் போவதை எதிர்பார்த்தவன்போல் தலையசைத்தான் சுரேஷ்.

''மிஸ்டர் அருண், உங்களுக்கு ஃபோன்'' 'வெளஞ்ச் மானேஜர் வீரேந்திரர் வந்து சொன்னார்.

அருண் எழுந்து உள்ளே சென்றான். ராதிகாதான். ''ஐ ஆம் ஸாரி, அருண். இங்கே நேரமாயிடுச்சு. நீ சாப்பிட்டாச்சா? 'டைம்' ஆயிடுத்துன்னா நீ போ. என்ன சொல்றே?''

அவள் அவனோடு வந்து தங்கத் தொடங்கியதிலிருந்து அவனை 'நீங்க' என்று சொல்வதில்லை. ரமேஷை அவள் 'அவன்' என்றுதான் குறிப்பிடுவது வழக்கம்.

''நான் சாப்பிடலே...பட் நான் போறேன். நீ முன்னாலேயே போன் பண்ணியிருக்கலாமில்லையா?''

''ஐ ஆம் ஸாரி அருண்... சாப்பிடலேன்னா 'வெய்ட்' பண்ணேன். நானும் வரேன். ஜஸ்ட் ஃபைவ் மினிட்ஸ்...''

அவன் யோசித்தான்.

அப்பொழுது வாசலை நோக்கியிருந்தது அவன் பார்வை. அவன் கண்ட காட்சி...

விம்மியும் தாமோதரனும் உள்ளே நுழைந்து கொண்டிருந்தனர். (தொடரும்)



## எழுதுகிறார்கள்.....

ஆஸ்திரேலியாவில் விளையாடிவரும் இந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்களிடையே, சிறப்பாக ஆடுவதில் போட்டி இருக்குமோ இல்லையோ புத்தகம் எழுதுவதில் அவர்களிடம் கடும் போட்டி நிலவுகிறது. உதாரணத்திற்கு இவர்கள் எழுதிச் சமீபத்தில் வெளிவர இருக்கும் புத்தகங்களில் சில.....

| | |
|---|---|
| சுனில் காவஸ்கர்:- | RUNS BY THE TONS |
| சேட்டன் சௌகான்:- | BATTLE SCARRED |
| கபில்தேவ்:- | 1) ONE MAN ARMY<br>2) HOW TO PLAY CRICKET THE KAPIL WAY |
| விஸ்வநாத்:- | FIVE FEET FOR FAME |
| சந்தீப் பாட்டில்:- | A HIT IN THE STANDS |
| பின்னி:- | ALL ROUND HIT |
| தோஷி:- | DILIP THE MENACE |

ஆதாரம்:- சண்டே ஸ்டாண்டர்ட்
தகவல் : ''ராஜேஸ்வரி''

## குடும்ப அட்டை வைத்திருப்பவர்களே!



# உங்களுக்கு, மேலும் சிறப்பாகப் பணிபுரிய எங்களுக்கு உதவுங்கள்!

### உங்கள் நலனுக்கு ஒரு விண்ணப்பம்!

அரிசி, சர்க்கரை, மண்ணெண்ணெய் போன்ற இன்றியமையாப் பொருட்களை நியாய விலையில் பெற உங்கள் குடும்ப அட்டை உத்தரவாதமளிக்கிறது. எனவே, தொடர்புடைய அதிகாரிகள் பரிசீலிக்கும் போது, உங்கள் குடும்ப அட்டையை அவரிடம் காண்பிப்பது உங்களது கடமையாகும்.

**• சிலர் செய்யும் தவறுகளால், பலருக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய இன்றியமையாப் பொருட்கள் கிடைக்காமல் போய் விடுகின்றன.**

1955-ம் ஆண்டு இன்றியமையாப் பொருட்கள் சட்டத்தின்கீழ் வெளியிடப்பட்டுள்ள தமிழ்நாடு இன்றியமையாப் பொருள் (குடும்ப அட்டைமூலம் விநியோகத்தை ஒழுங்கு படுத்தல்) ஆணை 1974ன்படி கீழ்க் கண்ட செயல்கள் குற்றமாகும்.

குடும்ப அட்டை

- இல்லாத ஒருவர் பெயரில் அல்லது பொய்ப் பெயரில் குடும்ப அட்டை பெறுவது அல்லது
- குடும்பத்தில் இல்லாத ஒருவர் பெயரை அல்லது கற்பனையான பெயரை குடும்ப அட்டையில் சேர்த்திருப்பது.
- வேறு ஒரு குடும்பத்திற்கு வழங்கப் பட்ட அட்டையில், சேர்க்கப்பட்டுள்ள நபரின் பெயரை மற்றொரு குடும்ப அட்டையில் சேர்த்திருப்பது.
- வேண்டுமென்றே தவறான அல்லது பொய்யான தகவல்கள் குடும்ப அட்டையில் இடம்பெற்றிருப்பது.
- குடும்ப அட்டையைப் பிறருக்கு மாற்றுவது அல்லது அடகுவைப்பது
- குடும்ப அட்டையை அதற்கு உரியவர்கள் உபயோகிக்காமல், மற்றவர்கள் உபயோகிப்பது.

மேற்கூறிய ஆணையின் 12-வது பிரிவுப்படி, கீழ்க்கண்டவைகளும் குற்றமாகும்:

- ஒருவர் பெயர் ஏற்கனவே ஒரு குடும்ப அட்டையில் இடம் பெற்றிருப்பது தெரிந்தும், தவறான முறையில் அவர் வேறொரு குடும்ப அட்டை பெற விண்ணப்பிப்பது அல்லது பெறுவது.
- தவறான தகவல் தந்து குடும்ப அட்டை பெறுவது.
- சட்டபூர்வமான- அங்கீகாரமின்றி குடும்ப அட்டையில் திருத்தங்கள் செய்வது அல்லது அழிப்பது.

### பொதுமக்கள் கவனத்திற்கு

குடும்ப அட்டையைப் பெறவும், அதில் மாற்றங்கள் செய்யவும், உணவுத் துறை உதவி ஆணையரின் அலுவலகத்துடன் நேரடியாகத் தொடர்பு கொள்ளுங்கள்.
வேறு எந்த நபரின் உதவியையும் நம்பி ஏமாறாதீர்கள்!






இயக்குநர், செய்தி, மக்கள் தொடர்புத்துறை, சென்னை 600 009.




## 11. தேசிய வெள்ளம்

தத்துவங்கள் இப்படித்தானே பிறக்கின்றன!

கண்ணீரிலும், கவலையிலும், ஓலத்திலும் அவை கனிந்து கனிந்து விழுகின்றன.

உடம்பும் ரத்தமும் சுறுசுறுப்பாக இருந்தால் உள்ளத்தில் எழும் ஆவேசம் வெள்ளம் போல் வருகிறது.

சில விஷயங்களை அவன் படித்திருக்கிறான்; எழுதி இருக்கிறான்; பல விஷயங்களை அவன் படித்ததில்லை எழுதி இருக்கிறான். எந்த நிகழ்ச்சிக்கும் எந்தப் பாட்டுக்கும் தொடர்பு என்பது இப்போது அவன் கவனத்துக்கு வரவில்லை. ஆனால் சில பாடல்களுக்கு மட்டுமே அப்படி நிகழ்ச்சித் தொடர்பு உண்டு. மற்றவை உள்ளத்தின் உற்சாகத்தால் மிதந்து வந்தவையே.

அன்றைய இரவு அவன் எழுதியது ஒரு துயரம் நிறைந்த உரைநடை. அது முழுமை பெறவில்லை. உண்மையான துயரம் உடனே தத்துவமாகாது. அன்று ஆறுதல் சொன்னவன் மற்றொருத்தி.

அவனது வாழ்க்கையில் அது ஒரு ஊமைக் காயம். பின்னாளில் 'நான் மட்டும் அறிந்த கதை' என்ற தலைப்பில் குமுதத்தில் அவன் ஒரு கவிதை எழுதியது நினைவுக்கு வருகிறது. இடைவெளி அதிகம். பத்து ஆண்டுகள்.

இந்த நிகழ்ச்சிகள் மூலம் தனது பழக்கங்களை நியாயப்படுத்தஅவன் முன்வரவில்லை. அவனது பழக்கங்கள் அனைத்துக்கும் ஒரே ஒரு காரணம்தான் உண்டு. அதுவும் நிரந்தரமான ஓர் ஊமைக் காயம்.

பொழுது விடிந்து விட்டது. புதிய பிரச்னைகள் கண் முன்னாலே நின்றன. பானு மறக்கப்பட்டு விட்டாள்.

காலை எழுந்தால் கடன்காரனும் அரசியலும்தானே!

அன்றைக்குச் சினிமாக் கம்பெனிகள் வளமாக இருந்தன. எட்டுக் கார்கள், பத்துக் கார்கள் காலையில் படையெடுக்கும். காலை ஒன்பது மணிக்கு ஆரம்பித்தால் பன்னிரண்டு மணிக்குள் ஆறேழு பாடல்களை முடித்து விடுவான்.

எப்படியோ கவலைகளையும் அவற்றை மறப்பதற்கான சூழ்நிலைகளையும்ஆண்டவன் மாற்றி மாற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தான்.

அந்த ஆண்டில் பண்டித ஜவாஹர்லால் நேருவும், தலைவர் காமராஜரும் ஹைதராபாத்தில் சந்தித்தார்கள். அங்கேதான் காமராஜ் திட்டம் உதயமாயிற்று.

இமயம் முதல் குமரி வரையில் உள்ள மத்திய மாநில மந்திரிகள் அனைவரும் ராஜிநாமா செய்ய வேண்டும். அந்த ராஜிநாமாக்களில் எதை ஏற்றுக்கொள்வது என்பதை ஜவாஹர்லால் தீர்மானிப்பார்.

இந்தத் திட்டத்தின்படி சோஷலிஸக் கொள்கைகளுக்கு விரோதமாக இருந்த மந்திரிகள் பலர் கைவிடப்பட்டனர். காமராஜர் அகில இந்தியப் புகழ் பெற்றார்.

ஏற்கனவே சீனப் படையெடுப்பின்போது காங்கிரஸ் காரியக் கமிட்டியில் பலர் நேருவைக் கடுமையாகத் தாக்கி இருந்தார்கள். கிருஷ்ணமேனனின் ராஜிநாமாவைக் கோரி இருந்தார்கள். 'அப்படியென்றால் நானும் ராஜிநாமாச் செய்ய வேண்டியிருக்கும்' என்றார் ஜவாஹர்லால். 'அந்தக் கேள்வியும் தள்ளப்படவில்லை' என்றார் அனுமந்தையா.

சீனாவை நம்பி மோசம் போன ஒரே காரணத்துக்காக நேரு செய்த அத்தனை சேவைகளையும் காரியக்கமிட்டி மறந்திருந்தது.

காங்கிரசுக்குள்ளே அமெரிக்க ஆதரவாளர்கள் பலர் இருந்தார்கள். சி. ஐ. ஏ.க்கும் அவர்களுக்கும் நெருங்கிய தொடர்பிருந்தது. அந்தக் கூட்டத்தில் ஒரு பகுதியை ஒழித்துக் கட்டுவதற்கு 'காமராஜ் திட்டம்' பெரிதும் பயன்பட்டது.

திட்டத்தைக் கொடுத்து விட்டுச் சென்னை வந்தார் காமராஜர். அவரோடு அவன் பேசிக் கொண்டிருந்தபோது, ''இதோ பார், இந்தக் கிருஷ்ண மேனனை எல்லோரும் சேர்ந்து பழிவாங்கி விட்டார்கள். அவர் மனம் ஒடிந்து போய்விடக் கூடாது. அவரிடம் நேரு மிகுந்த பிரியம் வைத்திருக்கிறார். கிருஷ்ண மேனனை நான் சென்னைக்கு வரச் சொல்லியிருக்கிறேன். அவருக்கு ஏதாவது வரவேற்புக் கொடுக்க வேண்டுமே'' என்றார்.

தலைவர் சொல்லிவிட்டால் போதாதா? மறுநாளே அவன் 'தென்றல் திரை' பத்திரிகையில் எழுதிவிட்டான்.

அந்த நேரத்தில் சீனப் படையெடுப்பை யொட்டிக் கம்யூனிஸ்ட் அகிலத்தில் பிளவு

ஏற்பட்டு, இந்தியாவிலும் கம்யூனிஸ்ட் கட்சி இரண்டாகப் பிளந்தது. சீன ஆதர வாளர்கள் 'மார்க்ஸிஸ்ட்' எனவும் எதிர்ப் பாளர்கள் இந்தியக் கம்யூனிஸ்டகள்' என் றும் பெயர் பெற்றார்கள்.

கிருஷ்ண மேனனை வரவேற்பதில் இந்திய கம்யூனிஸ்ட்கள் பெருமளவு ஒத்துழைத் தார்கள்.

கடற்கரையில் மாபெரும் கூட்டம். 'கேரளச் சிங்கமே வா' என்று ஒரு கவிதை படித்துக் கொடுத்தான் அவன்.

உட்லாண்ட்ஸ் ஓட்டலில் கிருஷ்ண மேன னுக்கு விருந்து நடத்தினான்.

இந்த நிகழ்ச்சியால் காமராஜருக்கு அவ னிடம் ஈடுபாடு அதிகமாயிற்று.

அடுத்த கட்டமாக இந்திய தேசிய காங்கிரஸின் தலைமைப் பீடத்தில் காம ராஜரை அமர்த்தினார் ஜவாஹர்லால் நேரு.

தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு சென்னைக்குத் திரும்பிய காமராஜருக்குப் பிரம்மாண்டமான வரவேற்புத் தரப்பட்டது.

அப்போது அவன் அண்ணன் மகன் பஞ்சு அருணாசலம் சீன ஆக்கிரமிப்பை மையமாக வைத்து 'இரத்தத் திலகம்' என்று ஒரு படத்தை எடுத்திருந்தான். அந்தப் படத்தை அன்றிரவு ஏ. வி. எம். ஸ்டுடியோவில் காம ராஜருக்குப் போட்டுக் காட்டினான் அவன்.

இரத்தத் திலகம் படத்தை எடுப்பதற்கு அவனும் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல. ஒரே கொள்கை வெறி — அதற்காகவே எடுக் கப்பட்ட படம் அது.

படத்தில் நடிப்பதற்கு வாட்டியில் உள்ள பயிற்சி ராணுவத்தைக் கொடுத்து உதவும் படி தனது மானேஜரை அனுப்பி இருந்தான். அப்போது மந்திரியாக இருந்த ஓ. வி. அளகேசன், ''அதெல்லாம் முடியாது'' என்று கூறிவிட்டார்.

'இரத்தத் திலகம்' படத்துக்குப் பட் டாளச் சட்டை, பூட்ஸ், துப்பாக்கி செய் வதற்கே ஒரு லட்சம் ரூபாய் ஆயிற்று. படம் நன்றாக ஓடிற்று. குறைந்த விலைக்கு விற்றதால் மூன்றரை லட்ச ரூபாய் நஷ்டம். காமராஜ் முழுப் படத்தையும் பொறுமை யாகப் பார்த்தார். படம் முடிந்த பிறகு, ''படம் நன்றாக இருக்கிறது. ரொம்ப நீள மாயிருக்கிறது. இதை ரெண்டு படமாகப் பண்ண முடியாதோ?'' என்று கேட்டார்.

அவர் சினிமாவே பார்த்ததில்லை. அவ் வளவு நேரம் பொறுமையாக உட்கார்ந் திருந்ததே அதிசயம்!

அடுத்த கட்டம் பண்டித நேரு தமிழகத் துக்கு வந்தது.

மவுண்ட் ரோடு ஆபட்ஸ்பரியில் பெரும் கூட்டம். நீண்ட நாட்களுக்குப் பிறகு அவன் நேருவைப் பார்த்தான்.

ஓராண்டுக்கு முன்பிருந்த நேருவா இவர்? பளபளவென்று ரோஜாப் பூவைப் போன் றிருந்த அந்த முகம் எங்கே? துள்ளிக் குதித்து வரும் அந்த இளமை எங்கே? சீனர்

களின் வஞ்சகத்தால், துரோகத்தால் ஓராண்டிலேயே கிழவராகி விட்டார், ஜவாஹர்லால். எவ்வளவு நொந்து வெந்து குமுறி இருப்பாரோ, யாருக்குத் தெரியும்?

அவன் ஒரு கவிதை படித்துக் கொடுத்தான். அதன் ஆங்கில மொழி பெயர்ப்பை வாங்கித் தமது சர்வானிப் பைக்குள் பத்திரமாக வைத்துக் கொண்டார் ஜவாஹர்லால்.

அவன், அவரது காலைத் தொட்டு வணங்கினான். இந்த நிகழ்ச்சியை மறு நாள் கேலி செய்திருந்தார் கருணாநிதி.

அந்தக் கால்கள் — புண்ணிய பூமிக்காக ஓடி ஆடித் திரிந்த அந்தக் கால்களைத்தானே அவன் தொட்டு வணங்கினான்? அவை என்ன வீடு வாங்கவும், சொத்துச் சேர்க்கவும் ஓடி ஆடிய கால்களா?

அவன் நேருவின் கால்களைத் தொட்டு வணங்கியபோது அங்கிருந்த காங்கிரஸ் காரர்கள் எல்லோர்து கண்களிலும் கண்ணீர் பெருகிவிட்டது. இத்தனைக்கும் அவன் அப்போது காங்கிரஸில் சேரவில்லை. தனது கவிதை ஒன்று நேருவின் சர்வானியில் இருக்கிறது என்பதே அவனுக்குப் பெருமையாக இருந்தது.

ஊரை அடித்து உலையில் போடும் சுயநலக் காரர்களையே பார்த்தவன், உன்னதமான மனிதர்களைப் பார்த்த போதெல்லாம் பொங்கிப் பொங்கிப் பூரித்தான்.

கருணாநிதிக்கு அவன் கடுமையாகப் பதில் கூறினான். ''ஈயின் தலையாக இருப்பதை விட சிங்கத்தின் வாலாக இருப்பது மேல்'' என்று அவன் பதில் எழுதினான்.

(அந்த மகா மனிதன் நேரு தாங்கிய கொடி இன்று தி. மு. க. மேடைகளில் பறப்பதைப் பார்க்கும்போது 'ஈஸ்வரா, இதுவும் உன் லீலையா' என்றுதான் கேட்கத் தோன்றுகிறது.)

காங்கிரஸ்காரர்களுக்குப் புது உற்சாகம் பிறந்தது. காமராஜர் பேசுகிறார் என்றால் பிரம்மாண்டமான கூட்டம் வரத் தலைப்பட்டது.

அவருக்காக, அவன் ஒருவன் வெறி பிடித்து எதையும் செய்யத் தயாரானான்.

சேலம் சிவஞானம் பிள்ளை, திருச்சி, டி. எஸ். அருணாசலம் போன்ற பழம்பெரும் காங்கிரஸ் தலைவர்கள் அவன் வீடு தேடி வந்து பாராட்டினார்கள்.

''கண்ணதாசனே வந்தாகி விட்டது; இனி என்ன கவலை?'' என்று காமராஜர் கூறியதாக டி. எஸ். அருணாசலம் கூறினார்.

அவன் ஆசிரியராக இருந்த 'தென்றல் திரை' பத்திரிகை சென்னை நகரில் மட்டும் பத்தாயிரம் பிரதிகள் போயிற்று. இத்தனைக்கும் அது மற்றப் பத்திரிகைகளை விட விலை அதிகம்.

காமராஜர் அவனுக்கு ஊக்கம் கொடுத்தார். அவனுக்கு மேலும் வெறி கிளம்பி விட்டது.

(வளரும்)

---

## BACK STANCE UPPER FOREARM BLOCK

ஒருவர் தடியால் மண்டையில் தாக்க வரும்போது நின்ற நிலையிலேயே படத்தில் காணும் முறைப்படி தடுத்து, எதிர்த்தாக்குதல் செய்ய முடியும், இந்த Back stance Upper forearm Block என்ற கராத்தே வகையில்!

# கராத்தே பயிற்சி 22

பயிற்சியாளர்: டோனி பொன்னையா

சித்திரம்: படம்: உத்ரா தயாரிப்பு: குன்றுமணி











✖ அரசு அலுவலகம் பெங்களூர்
✖ திரு. தேவராஜ் அர்ஸ்
✖ திரு. எஸ். பங்காரப்பா

# கர்நாடகாவில் என்ன குழப்பம்?

"திரு பங்காரப்பா தமது அமைச்சர் பதவியைத் தாமாக ராஜிநாமாச் செய்யாவிட்டால் பதவியிலிருந்து நீக்கப்படுவார்!' என்று கர்னாடக முதலமைச்சர் திரு ஆர். குண்டு ராவ் கெடு வைத்திருக்கிறார்.

'திரு குண்டுராவ் சொல்லிவிட்டதால் நான் ராஜிநாமா செய்ய வேண்டியது அவசியம் இல்லை.... பிரதமர் இந்திரா காந்திதான் என் தலைவர்... அவரது ஆலோசனைப்படிதான் செயல்படுவேன்!' — இது பங்காரப்பாவின் பிடிவாதம்.

கடைசியில் தமது விவசாயத் துறை அமைச்சர் பதவியைப் பிரதமரிடம் எழுதிக் கொடுத்த ஒரு ராஜிநாமா மூலம் திரு பங்காரப்பா துறக்கிறார்.

இந்த க் 'குடுமிப் பிடி' சண்டை நடுவில் 1980 டிசம்பர் 7ந் தேதி, முதல் மருத்துவக் கல்லூரி மாணவர்கள், ஹவுஸ் சர்ஜன்கள், மற்றைய ஜூனியர் டாக்டர்கள் முதலமைச்சர் குண்டு ராவ் மருத்துவத்துறையில் எடுத்த ஒரு நடவடிக்கையை வாபஸ் வாங்குவதற்காக வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள செய்தி...

BHEL பொதுத் துறை நிறுவன ஊழியர் களுக்கு அளித்துள்ள சம்பள உயர்வு, மற்றைய வேலை வசதிகள் போன்று தங்களுக்கும் அளிக்கவேண்டும் என்று பி. இ. எல்., ஹெச். எம். டி., ஹெச் ஏ. எல்., இந்தியன் டெலிபோன் இண்டஸ்ட்ரீஸ் போன்ற பல பொதுத் துறை நிறுவனங்களைச் சேர்ந்த 70,000 ஊழியர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர் என்ற செய்தி.

விவசாயிகளுக்கு முதலமைச்சர் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றக் கோரியும், அவர்களது இதர முக்கிய பிரச்னைகளைத் தீர்க்கவும் கோரி, தேவராஜ் அர்ஸ் தலைமையிலான காங்கிரஸ், சி.பி.ஐ., சி.பி.எம்.,-லோக் தல் ஆகிய கட்சிகள் நடத்தும் நீண்ட பாத யாத்திரை பற்றிய செய்தி...

இன்னொரு புறம்—

பதவி ஏற்று ஓராண்டு பூர்த்தியானதை ஒரு பெரிய விழாவாக ஜனவரி 12ம் தேதி கொண்டாடிய முதல்வர் குண்டு ராவ் 'பல எதிர்ப்புச் சக்திகள் என்னைப் பதவியிலிருந்துநீக்க முயன்று தோல்வியுற்று விட்டன. இந்த ஓர் ஆண்டு ஆட்சியில் நாங்கள் செய்துள்ளசாதனைகளை, கடந்த 25 ஆண்டுகளில் எந்த அரசும் செய்ய வில்லை' என்று குளுரைக்கும் செய்தி...

இவற்றை யெல்லாம் படித்தபோது கர்னாடகா அரசியலில் அப்படி என்ன தான் நடக்கிறது என்கிற ஆவல் எழ நேரில் போய்த் தான் பார்க்கலாமே என்கிற முடிவுடன் பெங்களூர் பயணமானேன்.

முதலமைச்சர் குண்டு ராவ் கறுப்புக் கண்ணாடியுடன் போஸ் கொடுக்கும் கவரொட்டிதான் ஊர் முழுக்கத்தென்படுகிறது.ஏதேதோ விழாக்கள்... இந்திரா காந்தியின் பிறந்த நாளைக் கொண்டாடும் ஒரு விழாவுக்கான கவரொட்டியில் முக்கிய விருந்தினர் ஆர். ஜி. ஆர். — எம்.ஜி.ஆர். என்று காணப்படுகிறது. ஆர்.ஜி.ஆர். என்பது ஆர். குண்டு ராவைக் குறிப்பிடுகிறது. விழாவில்மூப்பனாரும் பங்கேற்றுள்ளார்.

Smt. INDIRA GANDHI'S BIRTH DAY AND NATIONAL INTEGRATION DAY CELEBRATIONS
SHIVAJI NAGAR CORPORATION STADIUM
ON SUNDAY 11th JAN 81 AT 6 P.M.
SHRI C.K. JAFFER SHERIEFF
CHIEF GUESTS
SHRI R·G·R (HON'BLE C.M. OF KARNATAKA)
SHRI M·G·R
SPEAKERS
G.K. MOOPANAR
M. VEERAPPA MOILY (HON'BLE MINISTER OF FINANCE)
M. MALLIKARJUNA KARGE
[redacted] KAVIRSU KANNADASAN
T.R.R. SWAMY
H. HANUMANTHAPPA

தேவராஜ் அர்ஸ் அவர்களை சந்தித்தேன்.

சமீபத்தில் ஒரு விபத்தில் இழந்த அருமை மகளின் பிரிவுத் துயரம் கண்களில் தேங்கி நிற்கிறது. ஆனாலும் அவருக்கே உரிய ஒரு கம்பீரத்தை முகம் பிரதிபலிக்க 'பைப்'பை அவ்வப்போது உறிஞ்சியபடி உரையாடுகிறார்.

''முதலமைச்சர் திரு குண்டு ராவுக்கும், திரு பங்காரப்பாவுக்கும் இடையேயான கருத்து வேற்றுமை குறித்து நான் ஏதும் கூற விரும்பவில்லை...

''திரு குண்டு ராவ் தலைமையிலான அரசு ஆட்சி செய்த சென்ற ஓராண்டில் கர்நாடகா மாநிலத்தின் அபிவிருத்தி பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது. ஒரு மாநிலத்தின் முன்னேற்றம் என்பது பலவிதத் துறைகளிலும் அம்மாநிலத்தில் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்தித் திட்டங்களின் ஒட்டு மொத்த கணிப்பாகும். ஆனால் திரு குண்டு ராவ் இதைப் பற்றி யெல்லாம் அதிகம் கவலைப் பட்டுக் கொள்ளவேயில்லை.

''சட்டமும் ஒழுங்கும் பாதிக்கப்பட்டு, நிர்வாகத்தின் குறுக்கீடுகளால் போலீஸ் படை தங்களது கடமையைச் சரிவரச் செய்ய முடியாமல், அதைரியமும், அதிருப்தியும் அடைந்துள்ளனர்'' என்றார் அர்ஸ்.

''லட்சக் கணக்கான பைல்களை மிகக் குறுகிய கால அளவில் கவனித்துத் தீர்வு கண்டு நிர்வாகத்தை முதலமைச்சர் முடுக்கிவிட்டதாக விளம்பரங்களைப் பார்த்தேனே?''

இதைக் கேட்டு ஒரு நையாண்டிப் புன்னகையை முகத்தில் தவழ விடுகிறார். ''அதெப்படி முடியும்? ஒரு மேஜையிலிருந்து இன்னொரு மேஜைக்கு பைல் நகர்த்தப்படுவதும் ஒரு நடவடிக்கைதான்... ஒரு தீர்வுதான்!''

பார்த்தீனியம் என்ற விஷச் செடிகளைப் பற்றிக் குறிப்பிடும்போது ''முதலமைச்சர் விழாக்கொண்டாடி பார்த்தீனியம் செடியைப் பிடுங்குவது போல் விளம்பரம் செய்வதால் பிரச்னைக்குத் தீர்வு கண்டதாகி விடாது. அமெரிக்காவிலிருந்து உணவு தானியத்துடன் கலந்து வந்து பெங்களூர் முழுக்கப் பரவிய வண்ணம் இருக்கிறது. சரியான நடவடிக்கை எடுத்து இதனை ஒழிக்காவிட்டால் மக்களது உடல் நலத்தில் பெரும் பாதிப்பு ஏற்படும்'' என்கிறார்.

''சுமார் 7000க்கும் மேற்பட்ட மருத்துவப் பட்டதாரிகள் கர்நாடகாவில் வேலை வாய்ப்பில்லாமல் அவதிப்படுகிறார்கள். அவர்களுக்கு எவ்விதத்தில் வேலை வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கலாம் என்பது பற்றிச் சற்

✖ பெங்களூரில் ஒரு சுவரொட்டி விளம்பரம்
✖ திரு. ஏ. கே. சுப்பையா
✖ திரு. பி. ஜீ. ஆர். சிந்தியா





றும் கவலைப்படாமல், முதலமைச்சர் ஆண்டு ராவ் தனியார் ஒரு மருத்துவக் கல்லூரியைத் தொடங்க அனுமதித்ததுதான் மருத்துவக் கல்லூரி மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்வதற்குக் காரணம்... இப்போது பல சமுதாயப் பிரிவினர் தாங்களும் மருத்துவக் கல்லூரி தொடங்க அனுமதிக்கப்பட வேண்டும் என்று அனுமதி கோரியிருக்கிறார்கள். இம்மாதிரி மருத்துவப் படிப்பை முடிப்பவர்களுக்குக்கல்யாண மார்க்கெட்டில் வேண்டுமானால் கிராக்கி இருக்குமே தவிர வேலை கிடைக்காது!'' என்கிறார் வெண்டலாக.

''திரு குண்டுராவ் அளித்துள்ள சலுகைகளால்விவசாயிகள்திருப்தியடைந்துபோராட்டங்களை வாபஸ் செய்துள்ள நிலையில் தங்களது காங்கிரஸ் தலைமையில் சி.பி.ஐ., சி.பி.எம்., லோக் தல் ஆகிய கட்சிகள் இணைந்து விவசாயிகளின் 'பாத யாத்திரை' ஏற்பாடு செய்துள்ளதை அறிந்தேன்... இது அவசியந்தானா?'' என்று நான் கேட்டதும்,

''முதலமைச்சர் விவசாயிகளுக்கு அப்படி என்ன பெரிதாகச் செய்துவிட்டார்? நெல் சாகுபடிக்கான தண்ணீர் வரி முன்பு 35 பைசாவாக இருந்தது. இதை 60 பைசாவாக உயர்த்திவிட்டு, நாங்கள் எதிர்த்ததால் 40 பைசாவாகக் குறைத்துள்ளார். மற்றப்படி அவர் அளித்துள்ளதாகக் கூறப்படும் சலுகைகள் உயர் மட்ட விவசாயிகளுக்குத்தான் உதவ முடியும். அத்தகையவர்கள் தான் போராட்டத்தை வாபஸ் வாங்கியுள்ளார்கள்.

''இந்த நிலையில் ஏற்கனவே அறிவித்துள்ள சலுகைகளை நடைமுறையில்செயல்படுத்தவும், ஏழை விவசாயிகளின் கோரிக்கைகளை அரசு ஏற்கவும்தான் 'பாத யாத்திரை' நடத்துகிறோம்...'' என்கிறார் அர்ஸ்.

''நீங்கள் இந்திரா காங்கிரஸில் சேரப் போவதாகப் பலமான பேச்சு அடிபடுகிறதே!'' என்று கேட்டபோது, ''அப்படியா... எனக்கே தெரியாதே... அதுமாதிரி யோசனையுடன் எவரும் என்னை நாடவில்லை; நானும் போகவில்லை'' என்று அர்ஸ் குறிப்பிடுகிறார்.

தேசியப் பாதுகாப்புச் சட்டத்தைப் பற்றி குறிப்பிடும்போது, ''இச்சட்டம் அவசியமே இல்லாதது. இச்சட்டத்தின் உதவியால்தான் அரசு சமுதாய விரோதச் செயல்களில் ஈடுபடுவோர் மீது நடவடிக்கை எடுக்க முடியும் என்பது எனக்கு ஏற்பில்லை. இச்சட்டத்தின் பிரயோகங்களையும், துஷ்பிரயோகங்களையும் நாம் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். அரசிடம் ஏற்கனவே வேண்டிய அதிகாரங்கள் இருக்கின்றன. அவற்றால் முடியாமல் தேசிய பாதுகாப்புச் சட்டத்தால்தான் கறுப்புப் பணக்காரர்களையும், பதுக்கல்காரர்களையும் பிடிக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை. அதே மாதிரி கறுப்புப் பணத்தை வெளிக் கொணரப் பத்திரங்கள் வழங்கும் முறை கொண்டு வரப்பட்டுள்ளது. கறுப்புப் பணத்தைச் சட்டபூர்வமாக்கும் இந்த வழியை அப்பாவி மக்கள் அங்கீகரிக்கலாம். ஆனால் இதனால் கறுப்புப் பணம் வெளிவருமா என்பது சந்தேகம்தான்'' என்று கூறும்போது அர்ஸின் குரலில் வேதனை வெளிப் படுகிறது.

''பெரும்பான்மை பலத்துடன் மத்தியிலும், பல மாநிலங்களிலும் ஆட்சி செய்தாலும், காங்கிரஸ் ஆட்சிசெய்யும் பல மாநிலங்களிலும் உட்பூசல், குழப்பம், நிர்வாகத் திறமை இன்மை ஆகியவை மலிந்துள்ளதே, அடிப்படைக் காரணமாகத்தாங்கள் கருதுவது யாது?'' என்று நான் கேட்டதும், மெதுவாக நகைக்கிறார்.

''தற்போதைய சூழ்நிலையில் முதலமைச்சர் பதவி என்பது மிகவும் கடினமானது.பலதரப்பட்ட பிரச்னைகளைக் கொண்டது. அரசியல் அனுபவம், ஆளும் திறமை, பிராபல்யம், மக்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டு மதிக்கப்படும் தகுதி போன்ற பல அம்சங்கள் முதலமைச்சருக்கு அவசியமாகிறது. ஆனால் பிரதமரின் விசுவாசத்துக்கு ஆளானவர் என்பது மட்டுமே தற்போதைய தகுதியாக ஒரு முதலமைச்சருக்கு உள்ளது.



**வம்பன் வெங்கு**

| | |
|---|---|
| எம். ஜி. ஆர். : இந்திராவின் நல்லநடவடிக்கைகளைஅ.தி.மு.க. ஆதரிக்கும். | வெங்கு: தி.மு.க.வுக்கு எதிரான எல்லா நடவடிக்கைகளும் நல்ல நடவடிக்கைகளே! |
| செய்தி: சென்னைக்கு நெய் வேலி நீர்... | வெங்கு: வீராணம்... காவேரி... இருஷ்ணா. இப்போ நெய்வேலியா? நல்லா 'தண்ணீர் காட்டுறாங்களே!' |
| செய்தி: அ. தி. மு. க.வில் இரண்டு தி. மு. க. எம். எல். ஏக்கள்... | வெங்கு: தி. மு. க.வில் இரு அ.தி.மு.க. எம். எல். ஏக்கள்என்றுநாளைய செய்தி! |
| அஞ்சய்யா : மந்திரிகளின் எண்ணிக்கை குறைக்கப்படும். | வெங்கு: வெளியேற்றப் படும் மந்திரிகளுக்கு ஓசைப் படாமல் வாரியத் தலைவர் பதவிகள் அளிக்கப்படும்.' |
| செய்தி : வேலை நிறுத்தங்களைத் தடை செய்யப் புதிய அவசரச் சட்டம். | வெங்கு: அவசரச் சட்டங்களைத் தடைசெய்ய ஓர் அவசரச் சட்டம் தேவை. |
| செய்தி : கல்வி முறையை மாற்றி அமைக்க ஜனாதிபதி யோசனை. | வெங்கு: ஜனாதிபதி பதவியையே மாற்றி யமைக்க முயற்சிகள் நடப்பது ஜனாதிபதிக்குத் தெரியாதா? |

-விருச்சிக ராஜ்

இதனால்தான் இம்மாதிரியான குழப்பங்கள், உட்பூசல்கள் ஏற்படுகின்றன'' என்று திரு அர்ஸ் குறிப்பிட்டபோது அவரது முகத்தில் விஷமப் புன்னகை தவழ்கிறது.

அர்ஸ் வீட்டுக்கு அருகிலேயே குமரா பார்க் பகுதியில் தாம் அமைச்சராய் இருந்த போது வசித்த அதே இல்லத்தில் இன்னும் இருக்கும் பதவி துறந்த திரு. பங்காரப்பா வைச் சந்தித்தேன்.

நல்ல உயரம். நிறைக்கு ஏற்ற தோற்றம். ஆனால் சற்று இறுகலான முகம். முப்பத் தைந்து வயது மதிக்கலாம். கச்சிதமான உடை. அளவான, நறுக்கான பேச்சு.

''எனக்கும் முதலமைச்சர் குண்டு ராவுக் கும் தனிப்பட்ட முறையில் எவ்வித விரோத மும் கிடையாது. கட்சியின் கொள்கைகள், அவற்றை நிறைவேற்றுவதற்காக எடுக்கப் படவேண்டிய நடவடிக்கைகள், அனுசரிக்க வேண்டிய ஜனநாயக மரபுகள் போன்ற பல அடிப்படைக் கொள்கைகளில் முத லமைச்சருக்கும் எனக்கும் இடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகள்தாம் எங்களிடையே இடைவெளியைத் தோற்றுவித்து எனது ராஜினாமாவுக்குக் காரணமாகியது.

''திரு குண்டு ராவ் முதலமைச்சர் பதவி என்பது தமது பரம்பரைச் சொத்து என்பது போலவும், தாம் காலவரையறையின்றி இப் பதவியில் இருப்போம் என்பது போலவும் நினைத்து ஒருவித யதேச்சாதிகார பாணியில் ஆட்சி செய்கிறார்.

''மந்திரி சபையைக் கலந்து ஆலோசிக்கா மல் மிகப் பெரிய விஷயங்களில் கூட அவராகவே முடிவு எடுத்துப் பொது மேடை களில் அறிவித்து விடுகிறார்.

''வாக்குறுதி அளிப்பது என்பது அவருக்கே கைவந்த கலை... வாக்குறுதிகளை நிறைவேற்று வது குறித்துக் கவலைப்படுவதே கிடையாது. அதே மாதிரி சலுகைகளை அறிவிக்கிறாரே இதற்கேற்ற வருமானம் எப்படிவரும் என்பது பற்றியும் நினைப்புக் கிடையாது!

''ஏராளமாகப் பணம் செலவு பண்ணி ஏற்பாடு செய்யும் விழாக்களில் பங்கேற்பது என்றால் முதலமைச்சருக்கு ஏகக் குஷி. பல பண முதலைகள் இம்மாதிரி விழாக்களை ஏற்பாடு செய்து ஆதாயம் தேட முயல் கிறார்கள். ஆனால் மறுபுறம், லட்சக் கணக் கான ஏழைகள் பலவித வாழ்க்கை ப்பிரச்னை களுடன் அவதிப்படுகின்றனர். இதைப் பற்றி முதலமைச்சர் கவலைப்படுவதாகக் காணோம்.

''தனியார் வசம் மருத்துவக் கல்லூரியைத் திறக்க அனுமதித்ததோடு அல்லாமல் ரூபாய் ஒரு லட்சம் வரை CAPITATION FEE என்ற பெயரில் ஒவ்வொரு மாணவனை அனுமதிக் கும்போதும் வாங்கலாம் என்று முதலமைச்சர் அனுமதித்துள்ளார். இதனால் கருப்புப் பணம் உள்ளவர்கள், பண முதலைகள் இவர் களுக்கு மட்டுமே மருத்துவம் படிக்கும் வசதி ஏற்படும். குறைந்த வருவாய் உள்ள மக்களுக்கு இவ்வசதி கிடைக்காது.

''அரசின் நல்ல நடவடிக்கைகளை நான் ஆத ரிப்பேன். தவறானவற்றைக் கண்டிக்கத் தவற மாட்டேன்.... கட்சியின் முடிவை



எங்கே போகக் கொண்டிருக் கிறோம் என்பதைத் தெரிந்து வைத்திருப்பதுதான் அந்த இடத் துக்குச் சீக்கிரம் போய்ச் சேரு வதைக் காட்டிலும் முக்கிய மானது. பரபரவென்று காரியம் செய்வது சாதனையாகி விடாது.

- மேயல் நியூகமர்
எஸ். ராஜகணேஷ்

ஏற்று நடப்பேன்!'' என்று முடித்தார் பங் காரப்பா.

பாரதிய ஜனசங்கத்தின் தலைவரும் ராஜ்ய சபை எதிர்க் கட்சித் தலைவருமான திரு ஏ. கே. சுப்பையா கூறிய கருத்துக்கள்:

''திரு குண்டு ராவின் ஓராண்டு கால ஆட்சியின் மிகப் பெரிய சாதனை ஓராண்டு அவர் பதவியில் இருந்ததுதான்! இதை அவரே மேடையில் கூறியிருக்கிறார். திரு குண்டு ராவுக்கும் திரு பங்காரப்பாவுக்கும் இடையேயான மோதல் 'பதவி' விஷயத் தில்தான். ஆனால் ஒன்று... குண்டு ராவே முதலமைச்சர் பதவி வகிக்கும்போது அவர் கட்சியில் வேறு எவர் வேண்டுமானாலும் இப்பதவி வகிக்கலாம்!

''இந்திரா காந்திக்கு வேண்டியவர் என்ப தால் முதலமைச்சராக இருக்கிறார். அவரது கட்சியிலேயே சுதந்திர ஓட்டுரிமை அளித்தால் இப்பதவியில் அவர் இருக்க மாட்டார்.''

ஜனதா கட்சியின் மாநிலக் காரியதரிசி யான பி. ஜி. ஆர். சிந்தியாவைச் சந்தித் தேன். அவர் சொன்னார்:

''திரு குண்டு ராவ் இரண்டு நல்ல காரி யங்கள் செய்துள்ளார் என்று ஒப்புக்கொள்ள வேண்டும். அதிகாரிகளை ஓரிடத்திலிருந்து வேறோர் இடத்துக்கு மாற்றல் செய்து லஞ் சத்தைக் குறைக்க முயல்வதும், தேவராஜ் அர்ஸ் காலத்தில் அவர் ஏற்படுத்திய ஐம் பதுக்கும் மேற்பட்ட வாரியங்களில் தலைமை வகித்த அதிகாரிகள் அல்லாத அரசியல்வாதி களை நீக்கிவிட்டு அதிகாரிகளைத் தலைமைப் பொறுப்புக்கு நியமித்ததையும் கூற வேண் டும். தேவையற்ற வாரியங்களைக் கலைத்தும் விட்டார்.

''ஆனால் இந்த இரு நல்ல காரியங்களுக்குப் பிராயச்சித்தமாக அவர் செய்துள்ள எதிர் மறை நடவடிக்கைகள் ஏராளம்.

''பிரஜாவாணி, டெக்கான் ஹெரால்ட், இந்தியன் எக்ஸ்பிரஸ் ஆகிய பத்திரிகைகள் அவருக்குப் போதிய விளம்பரம் அளிக்க வில்லை என்பதால் அவரது ஆதரவாளர்கள் இப்பத்திரிகைகளைச் சூழ்ந்து கெரோ செய் தது, முதலமைச்சரும் இதற்கு ஆதரவு அளித்தது ஆகியவை கர்நாடகாவில் நிலவும் அலங்கோலமான சட்டம் - ஒழுங்கு நிலை மைக்கு நல்ல உதாரணமாகும்!''

இந்த நான்கு அரசியல் தலைவர்களைத் தவிர வேறு பல பொதுமக்களைக் கேட்ட போதும் திரு குண்டுராவ் ஆட்சி முறை பற்றி இதே மாதிரியான அபிப்பிராயங்களே பரவலாக வந்தன! —நாயகன்

புகைப்படம்: மன்னை மூர்த்தி

# வட்ட மேஜை



● 9.3.1980 கல்கி இதழில் வெளியான ''உலகம் சுற்றும் சைக்கிள் வீரர்'' மன்மோகன் சக்ரவர்த்தி பற்றிய கட்டுரை அளித்த ஊக்கத்தினால் நானும் எனது நண்பர் முத்துக்குமாரும் (இருவரும் திருநெல்வேலி தொலை பேசித் துறையில் பணியாற்றுகிறோம்) கடந்த 31–12–80ம் நாள் 1000 கி.மீ. சைக்கிள் பயணத்தைத் துவக்கி 9—1—81ம் நாள் வெற்றிகரமாக முடித்தோம்.

நாங்கள் வழக்கத்துக்கு மாறாக மலைப் பாதையையே தேர்ந்தெடுத்தோம். செங்கோட்டை வழியாகக் கேரளத்தில் புகுந்து மேற்குத் தொடர் மலையின் வழியாகப் பயணம் செய்து 'குமுளி' வழியாக மீண்டும் தமிழ்நாட்டை அடைந்தோம். வழிப் பயணத்தில் நண்பரின் சைக்கிள் ஒரு முறை 'பங்சர்' ஆனதைத் தவிர வேறு ஏதும் கஷ்டம் ஏற்படவில்லை.

எங்கள் எதிர்காலத் திட்டம் இலங்கை முழுவதையும் சைக்கிளில் சுற்றிப் பார்ப்பது.

திருநெல்வேலி-1 ஆர். பத்மனாபன்

● நடிகராக இருந்து நாட்டைப் பிடித்ததில் மட்டுமல்லாது, 'போஸ்' கொடுப்பதிலும் எம். ஜி. ஆரை ஒத்து இருக்கிறாரே அமெரிக்க ஜனாதிபதி ரேகென் – குதிரையில் ஆரோகணித்தபடி அவர் இருப்பது 'வேட்டைக்காரன்' எம். ஜி. ஆரை அப்படியே நினைவுறுத்துகிறதே!

விருத்தாசலம் எஸ். இம்மி

● தலையங்கத்தின் மூலம் ஒரே கல்லில் இரண்டு மாங்காய் அடித்து விட்டீர்கள். பொறுப்பேற்க இருக்கும் அமெரிக்க ஜனாதிபதிக்கு வாழ்த்துரை. அதே நேரத்தில் பொறுப்பில் இருக்கும் இந்திய அரசினருக்கு அறிவுரை.

வெள்ளகால் இரா. கந்தையா

● பலபேர் ரேகெனை முன்னாள் நடிகர் என்ற முறையில் எம். ஜி. ஆரோடு ஒப்பிட்டு எழுதியும் கூறியும் வந்தார்களே தவிர, யாருமே ரேகெனின் உயர்ந்த கொள்கைகள், நம் நாட்டின் எந்தத் தலைவருடைய கொள்கைகளுடன் ஒத்ததாகக் காணப்படுகின்றன என்பதில் சற்றும் அக்கறை செலுத்தவில்லை. ராஜாஜி கூறியது போல் தார்மீக பலத்தையும் பெருக்கிக்கொண்டு அணு ஆயுத ஒழிப்பிலும் ரேகென் நிச்சயம் அக்கறை காட்டுவார் என்றே எதிர்பார்ப்போம்.

பெங்களூர்-5 டி. ஏ. லலிதா

● 28–12–80 கல்கியில் ஹம்ஸத்வனியைப் பற்றிய குறிப்பில் ஹரிகாம்போதியில் ஜன்யம் என்பது தவறு. அதற்குப் பதில் லதாங்கி என்று இருக்க வேண்டும்.

25 கேள்விகள் தயாரித்து அவற்றுள் 20 கேட்டதனால், மற்றொரு பிழையும் நேர்ந்துள்ளது. ''போதும் போதும் ஐயா''வைப் பற்றிக் கேட்கப்படவில்லை. அதற்குப் பதில் ''பவப்ரியே'' என்ற பாடல் பாடிக் காட்டினேன். அதன் இராகம்தான் ''பவானி''. வாசகர்கள் மிக நுட்பமாகக் கவனித்திருக்கிறார்கள் என்பது மிக்க மகிழ்ச்சியூட்டுகின்றது.

சென்னை-5 எஸ். இராமநாதன்

● மதுரை மாநாட்டில் அலங்கார ஊர்திகள் ஊர்வலம் சரித்திர காலம் முதல் சமீப காலம் வரை தமிழ் வளர்த்தவர்களைச் சுட்டிக் காட்டியது. இதில் பெரியார் அண்ணாதுரை வரை பலர் இடம் பெற்றபோது, கோபால கிருஷ்ண பாரதி, மீனாட்சி சுந்தரம் பிள்ளை, அ. மாதவய்யா, பி. ராஜமய்யர், ராஜாஜி, டி. கே. சி, கல்கி ஆகியோர் புறக்கணிக்கப் பட்டது வேதனை தருவதாக உள்ளது.

சென்னை-32 ''கௌண்டின்ய''

● 'விதை நெல்' சிறுகதை படித்தேன். குமரித் தமிழ் வெளுத்து வாங்கியிருக்கிறார் ஆசிரியர். படிக்க உற்சாகமாக இருந்தாலும் சில பதங்களுக்கு அர்த்தம் புரியவில்லை. சொல் அகராதி இணைத்திருக்கலாம்!

சென்னை-11 மணிமகன்

● ஹேமா ஆனந்த தீர்த்தனின் படைப்பான ''ராஜலக்ஷ்மி'' போன்ற பண்பின் சிகரங்கள் பலர் இன்றும் இருப்பதால்தான் பாரத மண்ணின் பெருமை கொஞ்சமும் குன்றாமல் இமயம் போல் உயர்ந்துள்ளது!

அரகண்டநல்லூர் கே. பிரதாப் சிங்

● அய்க்கண் வழக்கமான அரசியல் சிறுகதைகளை விட்டுச் சற்றே விலகி நின்று, ''கட்சித் தாவல்'' சிறுகதையை எழுதியுள்ள விதம் அருமை.

மதுரை-1 இரா. சேகரன்

---

1724ம் ஆண்டில் ரஷ்யாவின் ஜார் மன்னரான மைக்கேல் என்பவர் என்ன காரணத்தினாலோ மூக்குப் பொடி போடுபவர்களின் மூக்கு அறுக்கப்படும் என்று அறிவித்து அதன்படி செயல் பட்டாராம்.

- இரா. இரவீந்திரன்



# அஞ்சையாவுக்கு அட்வைஸ்!



ஆந்திரப் பிரதேச முதல்வர் அஞ்சையா வரலாற்றிலேயே இல்லாதபடி 61 மந்திரிகள் கொண்ட மாபெரும் , மந்திரி சபையை அமைத்துவிட்டு, இப்போது அதனைக் குறைக்கும் வேலையில் ஈடுபட்டிருக்கிறார். இதைத் தொடர்ந்து பதவி இழந்த சிலர் பூச்சாண்டி காட்டி, இவரையும் ஒரு சென்னா ரெட்டியாக்க முயலலாம். எனவே 'தகுதி' அடிப்படையில் மந்திரிகளைத் தேர்ந்தெடுக்க இதோ சில அருமையான யோசனைகள்: இன்றில்லாவிட்டாலும் எதிர்காலத்தில் இதே போன்ற சிக்கல்களைச் சமாளிக்க இ. காங்கிரஸ் முதல்வர்களுக்கு உதவும்.

1. அத்தனை பேர் பெயர்களையும் சீட்டுகளில் எழுதி, சீட்டுக் குலுக்கிப் போட்டு, எத்தனை பேர் தேவையோ அத்தனை பேரைத் தேர்ந்தெடுக்கலாம். அதிர்ஷ்டமுள்ளோர் மட்டுமே மந்திரியாவார்கள்.

2. அத்தனை பேரையும் மைதானத்தில் நிறுத்தி ஓட்டப் பந்தயம் நடத்தலாம். முதலில் வரும் ஒருசிலருக்கு மட்டும் பதவி தரலாம். இதைக் காணக் கட்டணம் வைத்தால் அரசுக்குப் பணமும் வரும். வயதானோர் மந்திரி சபையில் இடம்பெற மாட்டார்கள்!





3. இந்திராஜியின் திருவுருவப் படத்தின் முன் அத்தனை பேரையும் தோப்புக்கரணம் போடச் சொல்லலாம். மிக அதிக எண்ணிக்கையில் தோப்புக்கரணம் போடுபவர்களை மந்திரிகளாக்கலாம்.



4. ஒரு கட்சிக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டு அந்தக் கூட்டத்துக்கு எவரெவர் அதிக அளவில் பஸ்களிலும், லாரிகளிலும் டிராக்டர்களிலும் ஆட்களைக் கொண்டு வருகிறார்களோ அவர்களுக்குப் பதவி தரலாம்.

5. பேச்சுப் போட்டி நடத்தி, இந்திரா காந்தி, சஞ்சய் காந்தி, ராஜீவ் காந்தி பற்றிப் பேசச் செய்து, அதிக அளவில் புகழ்ந்து பேசுபவர்கட்கு மந்திரி சபையில் இடம் அளிக்கலாம்.

6. நடுநிலைப் பத்திரிகை அலுவலகங்களுக்கு இவர்களை அனுப்பி ஆர்ப்பாட்டம் செய்யச் சொல்லலாம். அதிக அளவில் பொருட் சேதம் ஏற்படுத்துபவர்களுக்கு அமைச்சர் பதவி அளிக்கலாம்.

இந்த யோசனைகளில் உங்களுக்கு எது சௌகரியமாகப் படுகிறதோ அந்த முறையில் அமைச்சர்களைத் தேர்ந்தெடுங்கள். மன்னிக்கவும். உங்கள் சௌகரியப்படிதான் உங்கள் கட்சியில் நீங்கள் செயல்பட முடியாதே! இந்த யோசனைகளை எடுத்துக் கொண்டு ஒரு நடை டெல்லி போய் மாதாஜியிடம் காட்டுங்கள். அவர் ஆணைப்படி செயல்படுங்கள்.

— எஸ். சந்திரமௌலி

# ம.பொ.சி

**பா**ரதியார் பாரத நாட்டைத் தேவி வடிவில் கண்டு வழிபட பாடல்கள் புனைந்திராவிடில் சாதாரண மக்களை விடுதலைப் போரில் ஈடுபடுத்தியிருக்க முடியாது.

விடுதலைப் போராட்ட காலத்திலே பாரத மாதா படத்தையெடுத்துக் கொண்டு வீதிகளில் ஊர்வலமாகச் செல்வோம். அந்த மாதா விரித்த கூந்தலுடனும், கை—கால்களில் விலங்குடனும், அழுத கண்ணீருடனும்காட்சியளிப்பாள். அந்தப் படத்தை எடுத்துக் கொண்டு, 'சிறை வாயில் தனில் அழுதாள் பாரத மாதா' என்ற பாட்டைப் பாடிக் கொண்டு செல்வோம்.

வீடுதோறும் ஆண்களும் பெண்களும் வீட்டுக்குள்ளிருந்து வெளியே வந்து நின்று பாரத மாதாவின் படத்தை வழிபடுவார்கள். அவள் அழுத கோலத்துடன் காட்சியளிப்பதைக் கண்டு, அவர்களும் கண்ணீர் வடிப்பார்கள். அப்படித்தான் எழுத்து வாசனையற்ற பாமர மக்களை விடுதலைப் போரில் ஈடுபடுத்த முடிந்தது அந்த நாளிலே!

தமிழ் நாட்டுத் தேச பக்தர்கள்பாரத மாதாவை வழிபட்டபோது, இங்குள்ள சிலர் கேலி பேசினார்கள். பாரத மாதாவுக்கு 30 கோடி மக்கள் என்றால், அவளுக்குக் கணவன்மார் எத்தனை பேரோ? — என்று கூட வம்பளந்தார்கள். எங்களைக் கேலி பேசியவர்கள் மீது நாங்கள்சீறி விழவில்லை. எங்களுடைய சக்தி முழுவதையும் நாங்கள் ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதில் ஈடு படுத்தினோமாதலால், எங்களைக் கேலி பேசிய தமிழர்களை மன்னித்தோம்; மறந்தோம்!

விடுதலைப் போராட்ட காலத்திலே பக்தர்களின் தெய்வமான பாரத மாதாவுக்குக் கோயில்கள் எடுக்கவும் முயற்சிகள் நடந்தன. பார்ரதியாரே தமது கட்டுரையொன்றில் தமிழ் நாட்டிலே கிராமங்கள் தோறும் பாரத மாதாவுக்குக் கோயிலெடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக்கிறார். பாரதியாரின் அத்யந்த நண்பரான சுப்பிர மணிய சிவா தருமபுரி மாவட்டத்தில் உள்ள பாப்பாரப் பட்டிக் கிராமத்திலே பாரத மாதா கோவில் ஒன்றை நிறுவத் திட்டமிட்டு தேச பந்து தாஸை அழைத்து வந்து, அடிக்கல் நாட்டினார். அவர் அகால மரண மடைந்ததால், அவரது முயற்சி அடிக்கல்லோடு நின்று விட்டது.

காந்தியடிகள், பம்பாய் நகரில் பாரத மாதா கோயிலொன்றைத் திறந்து வைத்தாரென்றால், தேச பக்தர்கள் பாரத மாதாவிடம் கொண்டிருந்த பக்திக்கு வேறு சான்றும் வேண்டுமோ!

பாரதமாதா வழிபாட்டை மக்கள் ஏற்கச் செய்ததன் மூலமும் பாரதி காலத்தை வென்ற கவிஞனாகிறான்.

"**பரணி**" என்பது வீழ்ச்சியுற்ற நாட்டைப் பற்றி வெற்றி பெற்ற நாட்டின் சார்பில் பாடப்படுவதாகும்.

கலிங்கத்தின் வீழ்ச்சியைப் பாடியதால் செயங்கொண்டாரின் குறுங் காப்பியம் "கலிங்கத்துப் பரணி" என்று பெயர் பெற்றது.

தக்கனது யாகத்தின் வீழ்ச்சியைப் பாடியதால் கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தா படைத்த குறுங் காப்பியத்திற்கு "தக்கயாகப்பரணி" என்ற பெயர்.

களம் பாடும் புலவன், களத்தின் அருகே அமைக்கப்படும் பரண் மீதிருந்து பாடியதால்தான் 'பரணி' எனப் பெயர் வந்ததாம். புலவர்களிலே ஒரு சாரார் இதனை மறுக்கின்றனர் என்பதனை நான் அறிவேன். ஆயினும் நான் எடுத்துக் கொண்ட பொருளுக்குப் பொருந்துவதாக இருப்பதால், பரண் மீது இருந்து பாடுவது என்னும் கதையை நான் நம்புகிறேன்.

பாரதி காலத்திலே பாரதப் பெருநாடு — குறிப்பாக நமது தமிழ்த் திருநாடு ஆங்கில ஏகாதிபத்தியப் படைகளும் தேச பக்த வீரர்களும் சந்திக்கும் போர்க்களமாக விளங்கியது. அந்தக் களத்தின் அருகேயிருந்த பரண் மீது மிருந்த பாதுகாப்புடன் அமர்ந்து கொண்டு பரணி பாடினான் கவிஞன் பாரதி. அவன் அமர்ந்த பரண் எது தெரியுமா? தமிழகத்தின் அண்டையில் உள்ள பாண்டிச்சேரிதான்! அதுதான் அவனுக்குப் பாதுகாப்பான இடமாக இருந்தது. பாரதி பாண்டிச்சேரிக்குச் சென்றது, பறங்கியர் ஆட்சிக்குப் பயந்து அல்ல; அங்கு பாதுகாப்பாக இருந்துகொண்டு களம்பாடுவதற்காகத்தான்.



# களம் பாடிய கவிஞன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendren

# பிலிப்ஸ்

இந்தியாவில் 50 ஆண்டுகள்

ரூ 1,600*

## இப்போது பிலிப்ஸ் வழங்குது ஒருங்கிணைந்த சர்க்யூட்!
## அது அளவில் சிறிது, ஆற்றலில் பெரிது; அதிக தெளிவான ஒலி.

பிலிப்ஸ், எலக்ட்ரானிக் உலகில் வழங்கிடும் புதிய விந்தை: ஒருங்கிணைந்த சர்க்யூட்— மிகத் தெள்ளத் தெளிவான ஒலி வழங்குது—மொத்தத்தில் நம்பகமானது பல்லாண்டுகளுக்கு.

அத்துடன், புதிய பிலிப்ஸ் பவர்-காம்பாக்ட், விரிவான ஃப்ரீக்வன்சி ரேஞ்ச். எனவே, ஒலிப்பதிவை மீண்டும் அப்படியே கேட்கலாம்—அதன் வாட்டேஜ் வரிசையில்.

சிறப்பம்சங்கள்:

- விரிவான ஒலி முழக்கத்திற்கான 18 வாட்டுக்கள்
- 2 மைக்ரோ குருவ் ஸ்டைலி,
- டேப் ரிக்கார்டர்/ரேடியோவிற்கு தனித்தனியே ஆம்ப்ளிஃபையரை இயக்க முடியும்.
- ரிக்கார்டு முடிந்ததும் தானே நிறுத்திக் கொள்ளும் அமைப்பு.

**உங்கள் பிலிப்ஸ் டீலரிடம் இலவச செயல்முறை விளக்கம் பெறலாம்.**

OBM/5595 TM

* எக்சைஸ் தீர்வை உள்பட அதிகபட்ச சில்லறை விலை-மாநில விற்பனைவரி மற்றும் இதர உள்ளூர் வரிகள் தனி

# புதிய பிலிப்ஸ் பவர்–காம்பாக்ட் ஸ்டீரியோ ஸிஸ்டம் ஏ எஃப் 582



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka